# வேதாந்தமும் கிறித்தவமும்



பேராசிரியர் முனைவர் யா. தா. பாசுகரதாசு

M.A.(Tamil)., M.A.(Econ.)., M.Ed., M.Phil., Ph.D., Cert. in Sanskrit.

# வேதாந்தமும் கிறித்தவமும்

**பேராசிரியர் முனைவர் யா. தா. பாசுகரதாசு**

M.A.(Tamil)., M.A.(Econ.)., M.Ed., M.Phil., Ph.D., Cert. in Sanskrit.




**தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்**

**508, 22 -ஆம் தெரு, பெரியார் நகர், கொரட்டூர், சென்னை - 600 080.**

வேதாந்தமும் கிறித்தவமும்

பேராசிரியர் முனைவர் யா. தா. பாசுகரதாசு



முதற்பதிப்பு 2008

தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்

508, 22 -ஆம் தெரு, பெரியார் நகர்,

கொரட்டூர், சென்னை - 600 080.

பேசி: +91-44-26248563

மின்னஞ்சல்: nilt.india@gmail.com

இணையதளம்: www.niltindia.org

அட்டை வடிவமைப்பு: மோரியா ஊழியங்கள்

இந்நூலினை வெளியிட உதவிய
இயேசுவின் குடும்ப ஊழியத்தாருக்கு
எங்கள் இதயம் நிறைந்த நன்றி!

**Jesus Family Ministry**
**951, West Side Ave, Jersey City, NJ 07306, USA.**

## தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்

இது அரசாங்கத்தால் பதிவுசெய்யப்பட்டதொரு அறக் கட்டளை. இந்தியாவைக் கிறித்துவுக்குள்கொணர வேண்டும் என்னும் நோக்குடன் உழிய வாஞ்சையுடைய நண்பர் சிலரால் அமைக்கப்பட்டதொரு நிறுவனம் ஆகும்.

**இதன் நோக்கம்**

கிறித்தவக் குருமார், நற்செய்தியாளர், இறை தூதர், திருச் சபை உறுப்பினர் போன்றோருக்குப் பயிற்சி அளித்து இயேசு பெருமானின் இறுதிக்கட்டளையை நிறைவேற்றுவது.

திருவிவிலியம், இந்திய வேதங்கள், வேதாந்தம், தமிழ்ப் பக்தி இலக்கியங்கள் முதலிய ஆய்வுத் திட்டங்களில் பங்கேற் பதுடன் அவற்றை ஒழுங்கு செய்து, இந்தியவியல் சார்ந்த கல்வியின் வாயிலாக மறைந்துள்ள கிறித்துவை வெளிக் கொணர்ந்து இந்தியப் பண்பாடு, கோட்பாடுகள் முதலியவற் றின் அடிப்படையில் நற்செய்தியை அறிவிப்பது.

**பயிற்சித் திட்டங்கள்**

ஆண்டொன்றில் மூன்று பருவங்களாகக் கருத்தரங்கு வகுப்புகளைத் தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம் ஒழுங்கு செய்கிறது. மூன்று நாட்களடங்கியது ஒரு பருவ மாகும். ஓராண்டில் 35 முதல் 40 பேரைத் தேர்வு செய்து மூன்று பருவக் கருத்தரங்கு வகுப்புகளை நடத்தி ஏறத்தாழ 35 தலைப்புகளில் அவர்கள் பயிற்சி பெறும் வகையில் பாடத் திட்டம் வகுக்கப்படுகிறது. இதுவரை 17 குழுக்கள் தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனத்தின் வாயிலாகப் பயிற்சி பெற்றுச் சென்றுள்ளன. ஆண்டுதோறும் நடைபெறும் பயிற்சி வகுப்புகள் தவிர இத்தகு பயிற்சி பெற விரும்பும் திருச்சபை கட்கும் நிறுவனங்களுக்கும் இந்நிறுவனம் பயிலரங்குகளை ஒழுங்கு செய்கிறது. இந்நிறுவனத்தில் பயிற்சிபெறும் ஆசிரியர் கட்கும் ஆசிரிய மேம்பாட்டுப் பயிற்சி வகுப்புகளையும் இந் நிறுவனம் குறிப்பிட்ட காலங்களில் நடத்துகிறது.

# அணிந்துரை

சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'அறுவகைத் தரிசனமும் தமிழர் சமயமும் - விவிலிய ஒளியில் ஓர் ஆய்வு' என்னும் முனைவர்ப் பட்டத்திற்காகச் செய்த பல ஆண்டுக்கால ஆய்வின் வெளிப்பாடாக இச்சிறுநூல் உருவாயிற்று. நூலாசிரியர் முனைவர் யா. தா. பாசுகரதாசு சமய ஒப்பாய்விலும் சமய-மெய்ந்நூலியல் ஒப்பாய்விலும் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். தாம் கண்டறிந்த உண்மைகளை அநேகக் கருத்தரங்கங்களிலும் கூட்டங்களிலும் கூறி வருபவர். சிறப்பாக மதநல்லிணக்கக் கூட்டங்கள் பலவற்றிலும் இவற்றைச் சொல்லி வருபவர்.

பன்னூறு ஆண்டுகளாகப் பலி செலுத்தி வழிபட்டு வந்த வரலாற்றில் ஒரு மாற்றம்! உலகப் பெருஞ்சமயங்களில் பலி நிறுத்தப்பட்டு விட்டது. ஆகம விதிப்படி கட்டப்பட்ட இந்தியக் கோயில்களில் பலி பீடங்கள் இன்றும் உள்ளன. ஆனால் பலி பீடங்களில் பலி செலுத்தப்படவில்லை. பலி நிறுத்தத்திற்கு அவதாரமாக வந்த இயேசு கிறித்து பலியாகிவிட்டதே காரணம். இதன் தாக்கம் இந்திய மெய்ந்நூலியல் என்னும் தத்துவத்திலும் உள்ளதனை நூலாசிரியர் விளக்கியுள்ளமை மிகச் சிறப்பாக உள்ளது.

வேதங்களும் வேதாந்தமும் வேறு வேறு கருத்துமுறை மரபுகளைச் சார்ந்தவை என விளக்கியிருப்பது நம் சிந்தனையைத் தூண்டுகிறது. பழைய மரபுகளில் பழகிப் போய் ஊறிப்போன நமக்குப் புதிய கருத்துக்களை ஏற்பதற்குக் காலமும் வேண்டும்! மனமும் வேண்டும்!

இந்நூலைத் தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம் வெளியிடுவதில் மகிழ்ச்சி கொள்கிறது. நூலை வெளியிடுவதில் உறுதுணையாயிருந்த நிறுவனத்தின் பொறுப்பாளர், நண்பர் ஆகியோருக்கு நன்றி. நூல் வெளியீட்டிற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த போதகர் ஆசுவின் மைக்கேல் (ஜெர்சி சிட்டி) அவர்கட்கும் நன்றி.

சென்னை
19.09.2008.

இர. சௌந்தர்ராசன், செயலர்
தேசியத் தலைமையாளர்
பயிற்சி நிறுவனம்

# ஆசிரியர் உரை

உபநிடதங்கள், பிரம சூத்திரம், பகவத் கீதை ஆகிய மூன்றையும் 'பிரத்தானத் திரயி' என்று குறிப்பிடுவர். இம்மூன்றும் வேதாந்தக் கருத்து முறைக்கு அடிப்படையானவை. வேதாந்தம் என்பது திராவிட முனிவரின் ஆன்மீகச் சிந்தனைக் கருவூலங்களாகக் கொள்ளப்படுகின்றன. வேதாந்தக் கருத்து முறைகளைத் தொகுத்தும் வகுத்தும் முறைப்படுத்தியும் கொடுத்தவர் வேத வியாசர் ஆவர்.

வேதங்கள் ஆரியரின் சிந்தனையையும் வழிபாடுகளையும் வெளிப்படுத்துவன. தொடக்கத்தில் இவை வாய்மொழி வழக்காகவே இருந்து வந்தன. இங்ஙனம் எழுதாக்கிளவியாக நிலவிவந்த இப்பாடல்களைத் தொகுத்து எழுத்துருவம் கொடுத்தவர் வியாசர். இதனால் இவர் வேத வியாசர் என்று வழங்கப்பட்டார்.

வேதங்கள், பலி செலுத்தி வழிபடும் வழிபாட்டை விளக்குகின்றன. ஆனால் வேதாந்தம் பலிமுறை வழிபாட்டை மறுத்துரைப்பன. ஏனெனில் கடவுளே அவதாரமாக வந்து தம்மையே பலியாக ஈந்துவிட்டார். கடவுளின் பலியை விளக்குவது தான் 'புருச சூக்தம்' ஆகும். புருச சூக்தம் என்னும் பகுதி வேதங்களில் இணைத்துப் படிக்கப்படுகிறது. ஆனால் வேதங்களோடு இது தொடர்புடையதன்று என அறிஞர் எடுத்துக் காட்டியுள்ளனர். பலி நிறைவேற்றத்தை விளக்குவது புருச சூக்தம். எனவே இது வேதாந்தத்தைச் சார்ந்தது ஆகும்.

'கடவுள் பலியாகிவிட்டதால், இதற்கு நிழலாகச் செலுத்தப்பட்டுவந்த பழைய பலிமுறை வணக்கம் நிறுத்தப்பட்டுவிட்டது', என்னும் புதிய கோட்பாட்டை விளக்குவதற்குப் பழைய பலிமுறைகளை விளக்கும் பாடல்களைத் தொகுத்துக் காட்டுவது வியாசருக்குத் தேவையாகிவிட்டது. எனவே, வேதாந்தக் கருத்து முறையைச் சார்ந்த 'புருச சூக்த'த்தை வேதங்களில் இணைத்துக் காட்டுவதும் பொருத்தமானதாகத் தோன்றுகிறது எனலாம்.

வேதங்களிலுள்ள பலிக்கோட்பாட்டை அந்தப்படுத்துவதே வேதாந்தம். பலிக் கோட்பாட்டைக் கூறும் பழைய ஏற்பாட்டை அந்தப்படுத்தும் புதிய ஏற்பாட்டைப் போன்றது இது. இந்தப் பின்னணியில் இந்நூல் உருவானது. வேதாந்தத்திற்கும் கிறித்தவத்திற்கும் உள்ள தொடர்பின் இழைகளில் சிலவற்றை வெளிக்கொணர்வதாக இந்நூலைக் கொள்ளலாம்.

வேதாந்தமும் கிறித்தவமும் வெவ்வேறு நில எல்லைகளில் உருவானதாகத் தோன்றினாலும் கால எல்லைகளையும் நில எல்லைகளையும் க்டந்தவர் பரம் பொருளாகிய கடவுள். மனித குலத்தின் சிந்தனைகளுக்கு மூலமானவர் கடவுள் என்பதை ஏற்றுக் கொண்டால், அவரின் பிள்ளைகளாகிய மக்கள் அவரைப்பற்றிக் கொண்டுள்ள சிந்தனையும் வெவ்வேறாக எப்படி இருக்க முடியும்? அத்துடன் பண்டைத் தமிழகம் பிறநாடுகளோடு கொண்டிருந்த தொடர்பும், தூய தோமாவின் அருட்பணியும் இதற்குக் காரணமாயிருந்தன.

இப்பணியில் உறுதுணையாகத் திகழும் நிறுவனத் தலைவர் திரு. கா. ச. பாண்டித்துரை, செயளர் திரு. இர. சௌந்தர்ராசன், பொருளர் திரு. அ. சா. இராசசேகரன், பாடத்திட்ட ஒருங்கிணைப்பாளர் போதகர் சாரோன் தேவப்பிரசன்னம் ஆகியோருக்கும் நூல்வெளிவர உதவிய போதகர் ஆசுவின் மைக்கேல் அவர்கட்கும் நன்றி தெரிவிக்கிறேன். இந்நூல் செம்மையுற உருவாகப் பல்லாற்றானும் துணைநின்ற திரு. சான் செயானந்தம், திரு. போசு பொன்ராசு (மோரியா ஊழியங்கள்) முதலியோருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலிலுள்ள குறைகள் என்னுடையவை; நிறைகள் கடவுளுடையவை! அவருக்கே எல்லாப் புகழும் உரியவை.


யா.தா. பாசுகரதாசு

3, தமிழ்த் தெரு, சிவசக்தி நகர்

கொரட்டூர், சென்னை 600 080.

பேசி: + 91-44-26245777

9444225454

# வேதாந்தமும் கிறித்தவமும்

## அந்தியக் கருத்து முறைக்குக் காடுகளின் பங்களிப்பு

இந்தியத் திருநாட்டின் காடுகளுக்கும் இந்திய மெய்ந்நூலியல் எனப்படும் இந்தியத் தத்துவத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உள்ளது. இந்தியத் தத்துவ ஞானத்தினைப் பிறப்பித்துத் தாலாட்டி, வளர்த்து, உலகினுள் அனுப்பி உலவவிட்ட சிறப்பு இக்காடு களுக்கே உரியது என்று கூறலாம், இயற்கைச் செல்வங்களும் இயற்கை வளங்களும், இயற்கை வனப்பும் இறைவன் உலக மக்களுக்கு அளித்த அருங்கொடை; உடலின் நலத்தையும் உள் ளத்தின் வளத்தையும் ஒருங்கே பாதுகாத்து உயர்வளிக்கும் தன்மை காடுகளுக்கு உண்டு. நெரிசலும் இரைச்சலும் நிரம்பிய நகர்ப்புறங்களைவிட்டு நீங்கி, ஆழ்ந்த சிந்தனைகள் தங்கு தடை யின்றி நிகழ்வதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கவல்ல காடுகளை நோக்கி அக்கால முனிவர்களும் ஞானிகளும் சென்று அங்கு உறைந்து, ஏராளமான சிந்தனைக் கருவூலங்களையும் ஆன்மீகச் செல்வங்களையும் ஆக்கி உலகிற்கு அளித்துள்ளனர். இந்தியத் தத்துவத்திற்கு அடிப்படையான உபநிடத நூல்களில் பெரும்பாலா னவை இந்திய வனங்களின் பங்களிப்புகளே எனப் பெருமையுடன் கூறலாம். எனவே, உபநிடதங்களை வனநூல்கள் என வழங்கும் வழக்கு இன்றும் நிலவுகிறது.

இத்தகு காடுகளைத்தாம் பண்டை முனிவர் பலரும் ஞானிய ரும் தவமியற்றுவதற்குத் தகுதியான இடங்களாகத் தெரிவு செய்தி ருந்தனர் என்பதை இந்தியத் தொன்மங்களான புராணக் கதைகள் நமக்கு இன்றும் அறிவித்துக் கொண்டிருக்கின்றன. வரலாற்று நிலையில் கூட, கௌதம புத்தர் ஆழ்நிலைத் தியானம் இயற்றி,

அறிவொளி பெற்ற இடம் காடுதான் என்று சுட்டப்படுகிறது. கிறித் துவுக்கு அறுநூறு ஆண்டுகட்கு முன்னர் புத்தர் பெற்ற அறிவொளி யின் பயனாய்ப் புத்தசமயம் உருவாகி, பல்கிப் பெருகி உலகெல் லாம் பரந்து விரிந்துள்ளமை கண்கூடாக விளங்கிக் கொண்டிருக் கிறது. சமண சமயக் கருத்துகளின் வளர்ச்சிக்கும் இந்தியக் காடுகள் ஆற்றிய பங்கு அளப்பரியது ஆகும்.

முன்னர்க் குறிப்பிட்ட வனநூல்களாகிய உபநிடதங்கள் இந்தி யச் சமய வரவாற்றிலும் உலகளாவிய நிலையிலும் ஏராளமான மேலை நாட்டறிஞர் பலரையும் ஈர்த்து, எண்ணிறந்த நூல்களைப் பங்களிப்புச் செய்துள்ளன. இங்ஙனம் ஈர்க்கபட்டோரில் கிறித்தவ அறிஞரும் நாத்திகரும் அடங்குவர்.

## உபநிடதங்கள்

உடநிடதங்களை வேதாந்தம் எனக் குறிப்பிடுவர், 'உபநிஷத்' என்னும் வடமொழிப் பெயரையே உடநிடதம் என வழங்குகிறோம். உப+நி+ஷத்=உபநிஷத், இதற்கு ஈடுபாட்டுடன் நெருங்கி அமர்தல் என்று பொருள். அ.தாவது, ஆசிரியர் ஒருவர் பக்கத்தில் நெருங்கி அமர்தல் என்று விளக்கம் அளிக்கலாம். மெய்ந்நூலியற் கருத்து களைப் பற்றிக் கற்றுக்கொள்ள ஆர்வம் கொள்ளும் மாணாக்கன் ஒருவன், காட்டில் உறைந்து வரும் ஆசிரியர் ஒருவரை அணுகி, அவருக்கு அணுக்கமாக அமர்ந்து, அவர் கற்றுத் தரும் கருத்து களைக் கற்றுக்கொள்ளும் பாடங்களாக அல்லது கல்வி முறை யாக இதனைக் கொள்ளலாம்.

இங்ஙனம் அமைந்த பல்வேறு தொகுப்புகளுக்கு வேதாந்தம் என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. வேதாந்தம் என்னும் பெயர் முதன் முதலில் சுவேதாசுவதர உடநிடத்தில் (622) பயின்று வருகிறது என அறிஞர் எடுத்துக் காட்டியுள்ளனர்.

## திராவிடரின் சிந்தனை உபநிடதங்கள்

உபநிடதக் கருத்துகள் திராவிடரின் மெய்ந்நூலியற் கருத்து கள் என அறிஞர் பலர் சுட்டிக் காட்டுகின்றனர். கார்பே போன்ற மேலைநாட்டு அறிஞர் பலர் இதற்கு உடன்படுவர். திராவிடரின்

சிந்தனைகளே இந்தியச் சமயங்களுக்கும் இந்திய மெய்ந்நூலி யலுக்கும் அடிப்படைகளாகத் திகழ்கின்றன. திராவிடரின் சிந்த னைகளே இந்தியக் கருத்து முறை என்பதைப் பல்வேறு அறிஞர் பெருமக்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். ஆர்தர் பெரிடேல் கீத் என்னும் அறிஞர், "உபநிடதங்கள் திராவிடரால் உருவாக்கப்பட்ட வையே தவிர ஆரியரால் அல்ல, என்பது பல முறை குறிக்கப் படுகிறது", என 'வேத, உபநிடதங்களின் சமயமும் மெய்ந் நூலியலும்' என்றும் ஆங்கில நூலில் குறிப்பிடுகிறார்.

பிரம ஞானத்தைத் திராவிடரே கண்டறிந்து ஆரியருக்குக் கற்பித்து வந்தனர். இதில் முன்னோடிகளாக அரசர்கள் திகழ்ந் துள்ளனர். இவ் அரசர்களைச் சத்திரியர் என்று குறித்து வைத்துள் ளனர். சத்திரியர் என இங்குக் குறிக்கப்படுவது, வைதிக நெறியில் வந்த பிரிவினரான சத்திரியர் அல்லர். இவரெல்லாரும் திராவிட மரபினரான அரசர் ஆவர். திராவிடர் கண்டறிந்து போதித்து வந்த பிரம ஞானத்தைப் பிற்காலத்தில் வந்த ஆரியப் பிராமணர் கைப்பற்றி, தமது வல்லாண்மையின் கீழ்க் கொணர்ந்து, சூத்திரர் பிரம ஞானம் பெறத் தகுதியுடையவரல்லர் எனத் துணிகரமாக எழுதி நடைமுறைப்படுத்தலாயினர்.

மறுபிறப்பு, ஆன்மா, வைசுவானரா, பிரக்ஞாத்மன் போன்ற கோட்பாடுகள் பிரவாகனா, வைசாலி, அசுவபதி, கைகேயா, காசிமன்னன் அசாத சத்ரு போன்ற திராவிட அரசர்களாலே கற்பிக்கப்பட்டது எனக் கார்பே என்ற மேலை நாட்டறிஞர் கருதுகிறார். இவற்றைப் பிராமணர் கொடுத்தனர் என்பது சரியன்று என அவர் மேலும் விளக்கம் தருகிறார்.

இந்தியாவிற்குள் நுழைந்த ஆரியர் திராவிடரை மேற்கொண்ட னர். இங்கிருந்த திராவிடர் பேசிய மொழியின் எளிமையைப் பிராமணர் கண்டு, திராவிடரின் காவலராயும் வேதங்களை விளக்கு பவராயும் மாறி, திராவிடப் பண்பாட்டை ஆரியர் தமதாக்கிக் கொண்டு, இறுதியில் ஆரியரின் தலைவராகத் தம்மை உருவாக்கிக் கொண்டனர் எனப் பெரிடேல் கீத் கூறும் கூற்று இந்திய வரலாற் றைச் சரியாகப் புரிந்து கொள்வதற்கு உறுதுணையாக அமைந் துள்ளது.

## *கமுக்கமான அமர்வுகள்*

உபநிடதங்களைப் பற்றி எழுதுகின்ற ஆசிரியர் பலர், கமுக்கமாக அமர்வுகளில் கற்பிக்கப்பட்டவையாக உபநிடதங்கள் திகழ்கின்றன எனக் குறிப்பிடுகின்றனர். உபநிடதங்கள் எல்லாமே இங்ஙனம் கமுக்கமாகக் கற்பிக்கப்பட்டனவா என்பது ஒருபுறமிருக்க, பொதுவாக இங்ஙனம் சுட்டப்படுவதற்குரிய காரணம் தெளிவாக விளங்கவில்லை.

உபநிடதங்களின் பிழிவாகக் கருதப்படும் பிரமசூத்திரம் என்னும் காட்சியியல் நூல் இவ்வாறு தனித்தனிக் கமுக்கமான அமர்வுகளில் கற்பிக்கப்பட்டவற்றின் தொகுப்பாக அறிஞர் சிலரால் குறிக்கப்படுவது நோக்கற்பாலது. அதோடு, இந்நூலின் யாப்பு முறையும் சூத்திர அமைதியில், சொற்செட்டுடையதாக, அவ்வளவு எளிதில் எல்லாராலும் புரிந்துகொள்ள முடியாததாக அல்லது தெளிவற்றதாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

உபநிடதங்களில் விளக்கப்படும் வேதாந்தக் கருத்துகள், குறிப்பிட்ட மாணாக்கருக்கே கற்பிக்கப்பட்டுள்ளனவாதல் வேண்டும். மாணாக்கன் எழுப்புகின்ற ஐயவினாவும் அதனைத் தெளிவு படுத்தும் வகையில் ஆசிரியர் கூறும் விளக்கமுறையும் உபநிடதங்கள் பலவற்றில் நெடுக அமைந்துள்ளதைப் பார்க்குமிடத்து இது விளங்கும். கேள்வியும் பதிலுமாக அமைந்துள்ள முறையில் உபநிடதங்களில் வேதாந்தக் கருத்துமுறை விளக்கப்படுகிறது எனலாம்.

உபநிடதங்களின் எண்ணிக்கை நூற்றுக்கும் மிகுதியானவை என்பது பெருவழக்கு. இவ் உபநிடதங்களெல்லாம் ஒரே காலத்தில் எழுதப்படவில்லை. மிகப்பெரிய காலப்பரப்பில், அதாவது பல்வேறு காலக்கட்டங்களில் இவை தோன்றியவாதல் வேண்டும் என அறிஞர் பலர் குறிப்பிடுகின்றனர். எனவே இவற்றைப் பழைய உபநிடதங்கள் என்றும், பிற்கால உபநிடதங்கள் என்றும் வரையறுக்கின்றனர். சாந்தோக்கியம், பிருகதாரணியம், ஐதரேய, ஈசா, கௌசிதகி, தைத்திரிய, கேன போல்வனவற்றை மிகப் பழைய உபநிடதங்கள் என்று குறிப்பிடுகின்றனர்.

உபநிடதங்களின் மொழி நடையுங்கூட, கரடு முரடான பாதையில் செல்வது போன்று, செம்மை செய்யப்படாமல் அல்லது திருத்தஞ் செய்யப்பெறாத மொழிநடையோடு கூடியதாக அமைந் துள்ளது என அறிஞர் குறிப்படுகின்றனர். இவ் உபநிடதங்கள், தனித்தனியே தன்னளிவில் மெய்ந்நூலியலாகக் (தத்துவமாக) கொள்ளப்படாமல், பல தலைப்புகளில் பல ஞானியரால், பல சமயங்களில் கூறப்பட்ட கருத்து முறையின் தொகுப்புகள் எனக் கூறலாம். இவற்றின் ஆசிரியர் பலர் கற்பனை மாந்தராகத் திகழ்கின் றனர். சில இடங்களில் கற்பனை மாந்தரின் சார்பாகப் பேசுகின்ற ஆசிரியராகவும் உபநிடதங்களின் ஆசிரியர் திகழ்கின்றனர். உபநிட தங்களில் உலகியல் சார்ந்த கருத்துகளும், ஆன்மீகம் சார்ந்த கருத்துகளும் இடம்பெறுகின்றன.

எனவே, உபநிடதங்களில் விளக்கப்பட்ட பல்வகைக் கருத்து களையும் செம்மைப்படுத்தி, தொகுப்பு முறையோடு கூடிய கருத்து முறையாக அமைத்திடும் முயற்சி அறிஞர் பலரால் மேற்கொள்ளப் பட்டது. இம் முயற்சியின் பயனாய் விளைந்தவையே காட்சியியல் நூல்களாகத் (Darshanas) திகழ்கின்றன. இவற்றைச் சமற்கிருத்தில் தரிசனங்கள் எனக் குறிப்பிடுகின்றனர்.

## காட்சியியல்

'தர்ஷன்' என்னும் சமற்கிருதச் சொல், தமிழில் தரிசனம் எனத் தற்பவமாக வழங்கப்படுகிறது.

'த்ரிஷ்' என்னும் மூலச் சொல்லிலிருந்து 'த்ரிஷ்டி', 'தர்ஷன்' என்னும் சொற்கள் பிறந்தன. 'த்ரிஷ்டி' = கண், தரிசனம் = காட்சி. காட்சியிலும் இருவகைகள் உள்ளன. அவை புறக்காட்சி, அகக்காட்சி என்பன ஆகும். ஊனக் கண்ணால் அல்லது புறக் கண்ணால் காண்பது புறக்காட்சி என்றும், அகக்கண்ணால் காணும் காட்சி அகக்காட்சி என்றும் இருவகைகளில் காட்சி அமையும்.

கணாதர் இயற்றிய வைகேடிக சூத்திரத்தில் (x.ii.13) தரிசனம் என்னும் சொல் முதன்முதலாகக் கையாளப்பட்டது என்பர். கி.பி. 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அரிபத்திரா என்பவர், தரிசனம் என்னும் சொல்லை, மெய்ந்நூல் கோட்பாட்டு முறை (System of

Phyilosophy) என்னும் பொருளில் ஆண்டுள்ளார். ஆன்மாவைக் காணத் துணைபுரியும் துறை அல்லது கோட்பாட்டு முறை என்பதே தரிசனம் என வழங்கப்படுகிறது என்று விளக்கம் தருவர்.

தொல்காப்பியம் சங்கப் பனுவல்கள், மணிமேகலை முதலிய பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில், பழுதில் காட்சி, புரைதீர் காட்சி, மருளில் காட்சி, கசடீண்டு காட்சி, ஒத்த காட்சி உத்தி எனவும், இன்னபிற ஏராளமான வழக்காற்றிலும் காட்சி என்பது வழங்கப்படுகின்றது. புறநானூற்றில்,

> நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
> முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
> காட்சியின் தெளிந்தனம் ஆகலின் (புறம், 192)

என, வரும் அடிகள், கண்ணால் காணப்படும் புறத் தோற்றத்தை விளக்காமல், புறக்காட்சியை எடுத்துக் காட்டுவதன் மூலம் வேறொரு கருத்தினை விளக்கிக் காட்டும் வகையில் அமைந்துள் ளது. இதைப் போலவே புலன் கடந்த நிலையில் காட்சியியல் கருத்து முறைகள் சீர்த்தகு முறையில் விளக்கப்படுகின்றன. எனினும் காட்சியியலுக்கென்று தனிநூல் தமிழில் இல்லை எனலாம்.

## அறுவகைத் தரிசனங்கள்

துவைத வேதாந்தத்தைப் பேசும் மாத்துவர், 'சர்வ தர்சன சங்கிரக' என்னும் நூலில் மொத்தம் பதினாறு தரிசனங்களைக் குறிப்பிடுகிறார். ஆனால் அறுவகைத் தரிசனங்களே சிறப்பித்துப் பேசப்படுகின்றன எனலாம். அவை சாங்கியம், யோகம், நியாயம், வைசேடிகம், மீமாம்சை, பிரமசூத்திரம் ஆகியன ஆகும். இவ்வாறு காட்சியியல் நூல்களைக் குறித்து எழுதப்பட்டுள்ள நூல்கள் மிகுதியாக உள்ளன எனலாம். இவ்வறுவகைக் காட்சியியல் நூல்களுக்கும் உடநிடதங்களே மூல நூல்களாகும் என அறிஞர் குறிப்பிடுகின்றனர். அறுவகைக் காட்சியியல் நூல்கள் அனைத்தும் சூத்திர அமைதியில் எழுதப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். சூத்திரங்களின் காலம் உபநிடத காலத்திற்குப் பிற்பட்டது. உபநிடதங்களை இலக்கியமாகவும் காட்சியியல் நூல்களை இலக் கணமாகவும் நாம் கொள்ளலாம்.

"சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செல்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ட நுட்பம் சிறந்தன சூத்திரம்"

(நன்னூல், 18)

என்பதற்கேற்ப, சூத்திரங்களால் அமையப் பெற்ற இக்காட்சியியல் நூல்கள், கருத்துச் செறிவுடனும் ஆழ்ந்த பொருளை விளக்குவனவாகவும் விளங்குகின்றன என அறிஞர் பலர் எடுத்துக் காட்டியுள்ளனர்.

இந்நூல்களுக்கு உரை நூல்களும் விளக்க நூல்களும் மிகுதியாக உள்ளன. இவ் அறுவகைக் காட்சி நூல்களை இரட்டை ரெட்டையாகக் குறிப்பிடும் வழக்கும் உள்ளது. இதனைக் கீழ்க் காணும் வகையில்

சாங்கியம் - யோகம்
நியாயம் - வைசேடிகம்
பூர்வ மீமாம்சை - உத்தர மீமாம்சை

என்று இணைஇணையாகச் சுட்டிக் காட்டுவர். இக்காட்சி நூல்களின் ஆசிரியர்களைப் பின்வரும் பகுதியில் சுட்டிக் காட்டலாம்.

சாங்கியம் - கபிலர்
யோகம் - பதஞ்சலி
நியாயம் - கௌதமர்
வைசேடிகம் - கணாதர்
பூர்வ மீமாம்சை - சைமினி
உத்தர மீமாம்சை - பாதராயணர்

பாதாரயணரும் வேத வியாசரும் ஒருவரே என்பர். மேற்குறித்த ஆசிரியர் பற்றிய வரலாற்றாதாரங்கள் கிடைப்பது அரிதாயிருக்கிறது. இக்காட்சியியல் நூல்களும் அவற்றின் ஆசிரியர் பெயர்களும் பத்ம புராணத்தில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

மேற்குறித்த ஆறனுள்ளும் சைமினி எழுதிய பூர்வ மீமாம்சை என்னும் நூல் அல்லது கருத்து முறை வைதிகச் சார்புடையது ஆகும். பிற ஐந்தும் வேதாந்தச் சார்புடையன ஆகும்.

சைமினியின் பூர்வ மீமாம்சை என்பது வைதிக வேள்வி முறையை விவரித்து எழுதுகின்ற கருத்துமுறையாக விளங்கு கிறது. பிற ஐந்து தரிசனங்களும் வேதாந்தத்திற்கு மூலமான உபநிடதங்களை அடிப்படையாகக் கொண்டு இலங்க, பூர்வ மீமாம்சை மட்டும் அவ்வாறில்லாமல் வைதிகத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது. எனவே, பூர்வ மீமாம்சையை வைதிகத் தரிசனம் என்றும், ஏனையவற்றை வேதாந்தத் தரிசனங்கள் என்றும் குறிப்பிடுவதே மிகவும் ஏற்புடையதாகும்.

## வைதிக வழிபாடு

வேதங்கள் கூறும் வழிபாடுகளெல்லாம் பலியை முன்னிருத்திச் செய்யப்படுவன. வேதங்கள் எல்லாம் வழிபாடுகளைக் கூறுகின்றன வேயன்றி, அவை சமயங்களைக் கூறவில்லை. வேதங்களில் முழு முதற் கடவுட் கொள்கை என்பது கிடையாது. இயற்கைச் சக்திகளையும், சிறு தெய்வங்களையும், முன்னோர்களையும், ஆவிகளையும் வழிபடும் வணக்கங்களையும் உள்ளடக்கியவை தாம் வேதங்கள்.

செய்யுளமைப்பில் உள்ளது இருக்கு வேதம்; யாக முறை களைக் கூறுவது யசூர்; இசையமைதியில் அமைவது சாமம்; சாவிப்பு மந்திரங்கள் போன்றவற்றை உள்ளடக்கியது அதர்வணம்.

வேத மந்திரங்கள் வாய்மொழியாகவே இருந்து வந்தன. அவற்றைத் தொகுத்து எழுத்துருவம் கொடுத்தவர் வியாசர் என்னும் முனிவர். இவர் ஒரு திராவிடர். வேதங்களைத் தொகுத்ததனால் இவரை வேத வியாசர் என வழங்கலாயினர்.

கடவுள் மாந்தனாக அவதாரமெடுத்து இவ் உலகில் வருவார் என்னும் கருத்து வேதங்களில் இல்லை. மூவொருமைக் கோட்பாடு என்பதும் வேதங்களில் இல்லை. கடவுளுக்குக் கோயில் கட்டி வழிபடும் வணக்கமும் அதில் இல்லை. துறக்கம், நிரயம் பற்றிய கோட்பாடும் வேதங்களில் கூறப்படவில்லை. முற்பிறவி, அடுத்த பிறவி பற்றிய கோட்பாடும் இல்லை. வைதிகத்திற்கெனத் தனி இறையியற் கோட்பாடோ, மறையியலோ இல்லை. தி. பி. சிங்கல் என்பவர், "வைதிக வழிபாடு என்பது இயற்கை வழிபாடு ஆகும்.

இதில் மாந்தன் என்பவன் விலங்குளில் அரசன் என்றும், விலங்கு களில் முதலாமவன் என்றும் கருதப்பட்டான். பேரண்டத்தின் இயற்கை ஆற்றல்களைக் கண்டு அவன் பெருவியப் பெய்தினான்", (India and World Civilization, Part I , p.155) எனக் குறிப்பிடுகிறார்.

வேதங்கள் வெளிப்படுத்திக் காட்டுவன வழிபாடே தவிர. சமயம் ஆகாது என்பதைப் பல்வேறு அறிஞர் வெளிப்படுத்தியுள்ள னர். சமயம் என்பதில் கடவுட் கொள்கை. இறையியல், சமய உறுப்பினர் தகுதி, வழிபாட்டு நெறிமுறைகள், சடங்குகள் முதலிய கட்டமைதிகள் அமையப் பெற்று, அச்சமயத்தைப் பின்பற்றுவோர் அனைவருக்கும் சமத்துவ நிலை கொடுக்கப்பட்டு ஆன்மீக நிலை யில் விடுதலை பெறுவதற்குத் துணைநின்று வழிகாட்டுவதாக அமையும் நெறிகள் அமைந்திருக்க வேண்டும். இத்தகு வளர்நிலை பெற்ற கட்டமைதிகள் வைதிகத்தில் இல்லை. எனவே, வைதி கத்தை வழிபாடு என்று குறிப்பிடலாமே தவிர, அதனைச் சமயம் என்று கூறவியலாது.

வைதிக நெறிக்குக் கர்ம மார்க்கம் அல்லது கர்ம காண்டம் என்று பெயர். கர்மம் என்பது பலி செய்யும் வினையைக் குறிப்ப தாகும். எனவே இதற்குப் பலிக்கோட்பாடு என்று பெயர்.

வைதிகப் பலிக்கோட்பாட்டில் விலங்கினங்கள் பலி கொடுக் கப்பட்டன. விலங்கின் மாமிசத்தைப் பிராமணப் புரோகிதர்கள் ஆரவாரத்தோடு உண்டு வந்தனர். மிகப் பழைய வேதமாகிய இருக்கு வேதத்தில் இது குறிக்கப்பட்டுள்ளது. மாபாரதத்திலும் இது விளக்கபட்டுள்ளது.

பலி கொடுத்து வழிபாடு செய்வது என்பது பழந்திராவிட வழிபாட்டிலும் உண்டு. சிந்துவெளி வழிபாட்டிலும் இத்தகு வழி பாட்டு முறை இருந்து வந்தது என்பதற்கான தடயங்கள் கிடைத் துள்ளன. பலி செலுத்தி எரியூட்டி வந்ததற்கான சான்றுகளை அகழ்வாய்வுகள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

ஆரிய வழிபாட்டிலும் இம்முறை இருந்தது. பலிமாமிசத்தைச் சுட்டு உண்டு வந்த முறையை அவர் பின்பற்றி வந்தனர் என்பது அவர்தம் வழிபாட்டின் வழி நாம் அறிகிறோம். அதன் எச்சத்தை

ஆரிய வழிபாட்டில் இன்றும் காணலாம். விலங்கினைப் பலி கொடுக்கும் வழக்கம் நடைமுறையில் இல்லை. ஆனால் நெருப்பு வழிபாடு அவர்தம் வழிபாட்டில் நிரந்தரமான இடத்தைப் பெற்றுள் ளது. நெருப்பை மிக முக்கியமான தெய்வ வணக்கமாக அவர் இன்றும் பின்பற்றி வருவது வழக்கத்தில் இருந்து வருகிறது.

பழந்திராவிட வழிபாட்டிலும் பலி முறை இருந்தது. இன்னும் பலி செலுத்தி வழிபடும் முறை சிறு தெய்வங்களின் வழிபாடுகளில் இருந்து வருகிறது. இத்தெய்வங்களுக்கென எடுக்கப்படும் விழாக் களில், நேர்ச்சையாக விலங்குகளை வளர்த்து வருகின்றதை இன்றும் நடைமுறையில் காணலாம்.

பழைய ஏற்பாட்டு வணக்கமுறையில் பலிக்கோட்பாடு தலை யாய இடத்தைப் பெற்றுள்ளது. இசுரயேலரும் பின்னர் யூத சமயத் தைச் சார்ந்தோரும் பலிச் (விலங்குகளைப் பலியிட்டு) சடங்கு முறைகளைப் பின்பற்றி வந்ததைப் பழைய ஏற்பாட்டு நூல்கள் பல்லாற்றானும் விளக்கியுள்ளதை அறிகிறோம். பழைய ஏற்பாட்டில் பலி முறைகளுக்குரிய சட்டங்கள் வகுக்கப்பட்டு இசுரயேல் மக்க ளுக்குக் கொடுக்கப்பட்டதைப் பழைய ஏற்பாட்டு ஆகம நூல்கள் விளக்கிக் காட்டுகின்றன.

பழைய ஏற்பாட்டில் பலிவகைகள், பலி செலுத்தப்பட வேண்டிய விலங்குகள் அல்லது பறவைகள் பற்றிய விளக்கங்கள், பலி செலுத்த வேண்டிய முறைகள், பலி செலுத்தும் குரு (ஆசாரி யர்)மார் செய்ய வேண்டிய பணிகள், கடவுளுக்கும் மக்களுக்கும் பாலமாக விளங்கிய குருமாரின் இலக்கணம், பலி செலுத்த வேண்டிய காலங்கள், பலி பீடத்தின் அமைப்பு இவை போன்ற அனைத்து விளக்கங்களும் லேவியர் ஆகமம், உபாகமம் முதலான ஆகம நூல்களில் மிகுதியும் சிறப்பித்து வரையப்பட்டுள்ளதை நாம் அறிகிறோம்.

ஒருவர் செய்த பாவத்திற்குக் கழுவாயாகச் செலுத்தப்டுவதே பலி. இரத்தில் உயிர் இருக்கிறது என்பது இசுரயேலரின் நம்பிக்கை. ஒருவர் செய்த பாவத்தை ஈடுகட்டுவதற்கு ஒரு விலங்கின் உயிர் கொடுக்கப்பட வேண்டும்.

"இரத்தம் சிந்துதல் இல்லாமல் பாவமன்னிப்பு இல்லை", என்பது பழைய ஏற்பாட்டின்படி விளக்கப்படும் கோட்பாடு ஆகும்.

பாவம் எவ்வளவு கொடியது என்பது இதனால் விளங்குகிறது. கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவைத் துண்டித்து விடுவது பாவத்தின் தன்மை. முதல் மனிதன் ஆதாமுக்கும் அவரைப் படைத்த கடவுளுக்கும் இருந்த உறவை, ஆதாமின் பாவம் முறித்து விட்டது. ஆதாம் செய்த பாவம் என்ன? கீழ்ப்படியாமைதான்.

ஆதாம் என்றென்றும் கடவுளோடு உறவாடி இன்புற்றிருக்கவே அவனை அவர் படைத்தார். அவனது வாழ்க்கைக்கும். அவனது வழியில் வரவிருக்கும் சந்ததியார்க்கும் தேவையான அனைத்தையும் உருவாக்கிக் கொடுத்து, நிறைவடைந்த பின்னரே முதலாம் மாந்தன் உருவாக்கப்பட்டான். ஒவ்வொரு படைப்பையும் கடவுள் நல்லது என்று கண்டார். நன்மையான படைப்புகளின் சிகரமாக மாந்தன் படைக்கப்பட்டான். அதோடு, அனைத்தையும் ஆண்டு கொள்ளுங்கள் என்றும் ஆளுமை உரிமையையும் அவனுக்குக் கடவுள் கொடுத்தார். ஆனால், அவனுக்கும் அவனது தலைமுறையினருக்கும் நன்மை பயக்கக் கூடிய கட்டளை ஒன்றையும் கடவுள் அவனுக்கு விதித்தார்.

அதாவது, ஏதேன் தோட்டத்திலுள்ள எல்லா மரந்தரு கனிகளையும் உண்ணலாம். மரணத்தினைக் கொடுக்கக் கூடிய ஒரு மரத்தின் கனியை மட்டும் அவன் உண்ணலாகாது என அவர் விதித்த கட்டளையை அவன் மீறியதால், கடவுளுடன் அவனுக்கிருந்த உறவு துண்டிக்கப்பட்டது. ஏதேன் என்றும் இன்ப வனத்திலிருந்து அவனும் அவன் மனைவியும் விரட்டியடிக்கப்பட்டனர்.

ஆதாம் இரண்டு விதங்களில் பாவம் செய்தான். ஒன்று, கடவுளுக்குக் கீழ்ப்படியாதது, அடுத்தது, பிசாசுக்குக் கீழ்ப்படிந்தது. நீடு வாழ்வினை நல்கிய கடவுளுக்குக் கீழ்ப்படியாமல், சாவையும் நரகத்தையும் கொடுக்கும் சாத்தானுக்குக் கீழ்ப்படிந்தமை. சாத்தானுக்குரிய தற்காலிகமான வெற்றியை ஆதாம் கொடுத்துவிட்டான். நித்திய மரணமாகிய சாவினை அவன் தெரிந்து கொண்டான்.

இவ்விதமாகக் கடவுளோடு கொண்டிருந்த உறவில் ஏற்பட்ட விரிசலின் விளைவு, அவன் நிர்வாணி என்று உணர்ந்து கதறியது.

அவனது நிர்வாணத்தை மூடுவதற்குக் கடவுள் தோல் உடையைக் கொடுத்தார் என்று தொடக்க நூல் (ஆதியாகமம்) விளக்கமளிக் கிறது. இந்தத் தோல் உடை எப்படி வந்தது? விலங்கின் தசையை மூடியிருப்பதுதானே தோல்? எனவே, விலங்கு ஒன்று கொல்லப்பட்டி ருக்க வேண்டும். அவன் செய்த பாவத்திற்குக் கழுவாயாக ஒரு விலங்கு பலியிடப்பட்டது என்று கொள்ளலாம்.

தமது சாயலில் உருவாக்கப்பட்ட மனிதன் பாவத்தில் வீழ்ந்து விட்டாலும், அவன் மீது கொண்டிருந்த அன்பின் காரணத்தால், அருள் கூர்ந்து அவனுக்குத் தோல் ஆடையைக் கடவுள் உடுத்து வித்தார். இது விளக்கமாக விவிலியத்தில் கூறப்படவில்லை. ஆனால், கடவுள் ஆதாமின் பாவத்திற்குக் கழுவாயாக ஒரு விலங்கினைப் பலி கொடுத்திருக்க வேண்டும் எனப் பல இறை யியலார் கருது கின்றனர். இந்த முதலாம் ஆதாமின் பாவத்திற்கு வேற்று விலங்கினைப் பலிகொடுத்த கடவுள், அவன் தலைமுறை யினர் அனை வரையும் ஆட்படுத்திய பாவத்தையும் சாவையும் ஈடுகட்டவும். சாவின்மேல் வெற்றியளிக்கவும் இரண்டாம் ஆதாமாகிய இயேசு பெருமானே சிலுவையில் பலியாகத் தம்மைக் கையளித் தார்.

பாவம் செய்த ஆன்மா சாகும் என்பது திருமறை என்றாலும் அந்த ஆன்மா நிரந்தரமான சாவுக்குள்ளாகத் தீர்க்கப்படாதபடி அருள் சுரந்தபடியினாலே, இரத்தத்தைச் சிந்திப் பாவ மன்னிப்பை அருளும் விதியையும் கடவுள் உருவாக்கினார். தாம் ஏற்படுத்திய விதியைத் தாமே நிறைவேற்றியதுதான் இயேசுவின் சிலுவைப் பலி. இரத்தம் சிந்துதல் இல்லாமல் பாவமன்னிப்பு இல்லை. இயேசு பெருமான் தமது இரத்தத்தைச் சிந்தியிருக்காவிட்டால், ஆதாம் வழித் தொடர்ந்த பிறப்பு வழித் தீமைக்கு மன்னிப்பும் கிடைத்திருக்காது அல்லவா?

## பலி நிறைவேற்றம்

பழைய ஏற்பாட்டுப் பலி முறைகள் கூட, இயேசு பெருமானின் பலியினை முன்னறிவித்த குறியீடுகளாக அமைந்திருந்தன எனக் கொள்ளலாம். வேறுவகையில் இதனைக் கூற வேண்டுமானால், பழைய ஏற்பாட்டுப் பலி முறைகளெல்லாம், இயேசு கிறித்துவின்

பலியை நோக்கி அமைந்து, அதில் நிறைவு பெற்றன எனல் பொருந்தும்.

இயேசு பெருமான் மூலமே பலி நிறைவேறியது. எனவே, கிறித்தவ சமயத்தில் பலி செலுத்தி வணங்கும் வழிபாடு கிடையாது. கிறித்தவம், பலியின் சிறப்பினை ஏற்றுக் கொள்கிறது. ஆனால் பலி செலுத்துவதை ஏற்றுக் கொள்வதில்லை. எனவேதான் கிறித்தவத்தைப் பலி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயம் என்று குறிப்பிடுகின்றனர்.

கிறித்தவக் கோட்பாட்டைப் பின்பற்றி, தமிழகத்தில் முகிழ்த்த, பக்தி இயக்கத்தின் பயனாய் உருவான அறுவகைச் சமயங்களும் பலிநிறைவேற்றக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டவை. தமிழ்ச் சமயங்களான சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணாபத்தியம், சௌரம் ஆகியவற்றை அறுவகைச் சமயங்கள் என்பர். இவை சைவம், வைணவம் ஆகிய பெருஞ்சமயங்களுள் அடங்குகின்றன எனலாம். இவை கி.பி. 5ஆம் நூற்றாண்டளவில் உருவாகத் தொடங்கின என்பதை வரலாற்றில் காண்கிறோம். இவ் அறுவகைச் சமயங்களும் இயேசு பெருமானின் மாணாக்கரான தோமையர் இந்தியாவிற்கு வந்தபிறகு உருவானவை என்பதை ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

## தோமாவும் இந்தியாவும்

*இயேசு பெருமான் சிலுவையில் பலியாகி மூன்றாம் நாளில் உயிர்த் தெழுந்தார். அவர் உயிர்ப்பின் பிறகு நாற்பது நாட்கள் இவ்வுலகில் இருந்து, தம் திருத் தொண்டர்களுக்குக் காட்சி கொடுத்து, இறையரசு பற்றி அவர்களுக்கு விளக்கிக் காட்டினார்*

*(திருத்தூதர் பணிகள் 13).*

இயேசு பெருமானின் விண்ணேற்றத்திற்குப் பிறகு, அவர் தம் திருத்தொண்டர்கள், தமக்குக் கொடுத்த கட்டளையாகிய, நீங்கள் உலகெங்கும் சென்று நற்செய்தியைப் பரப்பி அவர்களையும் திருத்தொணடராக்குங்கள் (மத்தேயு 28:19-20) என்பதனைத் தலைமேற்கொண்டு செயலாற்றத் தொடங்கினார்.

அதன்பயனாய் இந்தியாவிற்குப் புறப்பட்டு வநதவர்தாம் தூய தோமா என்னும் இயேசுவின் அருட்தொண்டர். இவர் இருமுறை இந்தியாவிற்குப் பயணம் மேற்கொண்டதாக ஆசிரியர் குறிப்பிடு கின்றனர். அவர் கி. பி. 49இல் இந்தியாவின் வடபுலத்திலுள்ள தட்ச சீலத்திற்கு வந்தார். அவர் அங்கு வந்தபோது, கொண்டபோரசு என்னும் அரசர் அந்நிலத்தை ஆண்டு வந்தார்.

சற்றுக் காலம் முன்வரை, கொண்டபோரசு என்னும் ஓர் அரசன் இருந்ததில்லை; அவர் வெறும் கற்பனைப் பாத்திரமே என்று பலரும் கூறிவருவாராயினர். அவர்தம் கூற்றுகளெல்லாம் இன்று பொய்ப்பிக்கப்பட்டுள்ளன. கொண்டபோரசு வெளியிட்ட நாணயங்கள் ஏராளமாக இன்று கிடைத்துள்ளன. காபூல், காந்தகார், பஞ்சாபின் மேற்கு மற்றும் தென் பகுதிகளில் கிடைக்கப்பட்ட நாணயங்களில் கொண்டபோரசு மன்னனின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. இந்நாணயங்கள் மட்டுமல்லாமல், தக்ட்-இ-பாகி (Takht-i-Bahi) என்னும் பொறிப்பும் கி.பி. 1857இல் கிடைத்துள்ளது. இது இலாகூர் அருங்காட்சியகத்தில் உள்ளது என்பர். இப்பொறிப்பும் கொண்டபோரசு மன்னனின் ஆட்சியை உறுதி செய்கிறது. எனவே, தோமையர், கொண்டபோரசு மன்ன னைச் சந்தித்து, அவரது அரண்மனையை உருவாக்கியதில் பெரும்பங்காற்றி, அவரோடு தங்கி, அவருக்கும் இயேசு பெருமானின் அருட்செய்தியை அறிவித்தார் என்று வழங்கி வந்த செவிவழிச் செய்தியும், மரபாகக் கொண்டிருந்த கருத்துகளும் வரலாற்று நிகழ்ச்சிகளே அவை என்பது உறுதிப்படுகின்றன.

எகிப்தின் தென்பகுதியிலுள்ள நக் அமாதி (Nag Hammadi) என்னும் ஊரில் கண்டெடுக்கப்பட்ட 52 கையெழுத்துப் படிவங் களடங்கிய 13 கட்டப்பட்ட புத்தகங்களுள் 'தூய தோமாவின் பணிகள்' என்னும் நூலும் ஒன்று ஆகும். தூய தோமா இந்தியா விற்குச் சென்ற செய்தியும் இந்திய அரசர் கொண்டபோரசும் இந்நூலில் குறிப்பிடப்படுகின்றனர்.

கி.பி. 4ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தூய ஈப்ரிம் என்பார் சீரியாக் மொழியில் சிறந்த கவிஞராகத் திகழ்ந்தவர். தோமா இந்தியாவில் அருட்பணியாற்றி இந்தியாவில் இரத்தச் சாட்சியாகக்

கொலையுண்டார் என்றும், அவரது உடல் அங்கேயே அடக்கம் செய்யப்பட்டது என்றும் அவர் எழுதியுள்ளார். தூய தோமாவின் பெயரில் எடிசா (Edessa) என்னுமிடத்தில் தேவாலயம் ஒன்று கட்டப்பட்டது பற்றியும் இவர் குறிப்பிட்டுள்ளார். சீரியாக் மொழியில் எழுதப்பட்ட Didascallia என்னும் நூல் திருத்தொண்டரின் போதனைகள் எனப் பொருள்படும். தோமா இந்தியாவில் ஆற்றிய பணி பற்றி இந்நூல் குறிப்பிடுகிறது. வெனிசிய நாட்டுப் பயணி மார்க்கோ போலோ கி.பி. 1295இல் மயிலாப்பூரிலுள்ள தோமையரின் கல்லறையைப் பார்வையிட்டதாகத் தமது குறிப்பேட்டில் எழுதியுள்ளார். கிறித்தவர்களும் சாரசேனர்களும் தோமையரின் கல்லறைக்குத் திருப்பயணம் மேற்கொண்டு அவ்விடத்திலிருந்து சிவப்பு நிற மண்ணை எடுத்துச் சென்று நோயாளிகளின் மேல் பூசுவதாகவும் அதனால் அப்பிணியாளருக்கு நோய் குணமாகுமென நம்பியதாகவும் தமது குறிப்பேட்டில் அவர் குறிப்பிட்டுள்ளார்.

தூய தோமா கி.பி. 49இல் தட்சசீலம் வந்து மீண்டும் எருசலேமுக்குத் திரும்பியதாகவும் மறுமுறை அவர் கி.பி. 52ஆம் ஆண்டில் தமிழகத்தின் மேலைக் கடற்கரையாகிய மலபாரிலுள்ள கொடுங்களுருக்கு வந்து நற்செய்திப் பணியாற்றி அங்கு ஏழு திருச்சபைகளையும் நாகர்கோவிலுக்கருகிலுள்ள திருவிதாங்கோட்டில் முடிக்கப்பெறாத தேவாலயம் ஒன்றும் நிறுவியுள்ளார். அது அரைக் கோயில் என இன்றும் வழங்கப்பெறுகிறது.

இதனையடுத்துத் தோமையரின் திருத்தொண்டோடு தொடர்புடையதாக மயிலாப்பூர் திகழ்கிறது. மயிலாப்பூருக்கருகில் சின்னமலையும் அதனையடுத்துள்ள கல்மினா என அழைக்கப்படும் பெரிய மலையும் (தோமையர் குன்று) தோமையரின் பணிகளை இன்றும் பறைசாற்றிக் கொண்டிருக்கும் திருத்தலங்களாகத் திகழ்கின்றன.

தோமையரின் திருத்தொண்டின் பயனாக இயேசு பெருமானின் போதனைகளும் அவரது நற்செய்தியும் இந்திய மண்ணில் விதைக்கப்பட்டன. அவர் விதைத்த விதைகள் மக்கிப் போய் விடவில்லை. அவை வேரூன்றி அவற்றின் கனிகள் இந்தியச் சமயங்களிலும் இந்திய மெய்ந்நூலியலிலும் (தத்துவம்) ஏராளமாகப் புதைந்து

காணப்படுகின்றன. இவற்றை விளக்கும் வகையில் ஆய்வு நூல்கள் பல வெளிவந்துள்ளன.

இந்தியத் துணைக் கண்டமாகிய தமிழ்ப் புலத்தில் சமயமும் வடபுலத்தில் மெய்ந்நூலியலும் படிமங்களும் வளர்நிலை பெறுவதற் குத் தோமையரின் திருத்தொண்டு அடித்தளம் அமைத்துக் கொடுத் தமைக்கு நிரம்பிய சான்றாதாரங்கள் கிடைத்துள்ளன. மெய்ந்நூலி யலை விளக்கிக் கூறும் நூல்கள் பெரும்பாலும் செம்மொழி சமற்கிருதத்தில் அமைந்துள்ளன. சமற்கிருத மொழியில் அவை எழுதப்பட்டுள்ளமையால் நமக்கும் அவற்றுக்கும் தொடர்பில்லை என்பது போல் பலர் ஒதுங்கி நின்றுள்ளனர்.

சமற்கிருத மொழி ஆரியரின் மொழியன்று என்று ஆய்வுகள் பல இன்று வெளிப்படுத்துகின்றன. திராவிடரே இம்மொழியில் ஏராளமான நூல்களையும் இன்னபிறவற்றையும் எழுதி வழங்கி யுள்ளனர். இம்மொழி கிறித்துவுக்குப் பின் இரண்டாம் நூற்றாண்ட ளவில்தான் தோற்றம் பெற்றதென வரலாறு விளக்குகிறது. சமற்கிருத மொழியை எவரும் பேசியதில்லை. அதாவது, அது எவருடைய தாய்மொழியாகவும் இருந்ததில்லை. பாரசீகம், கிரேக் கம், தமிழ், இலத்தீன், அரமேயம், அர்த்தமாகதி, பாலி ஆகிய மொழிகளின் கலவையாக இம்மொழி சீரமைக்கப்பட்டது என இக்கால அறிஞர் விளக்கிக் காட்டுகின்றனர். சமற்கிருதம் என்றாலே, செம்மை செய்யப்பட்டது என்பது பொருளாகும். தோமையரின் வருகைக்குப் பிற்பட்ட காலங்களில் செம்மொழி சமற்கிருத மொழி உருவாகியுள்ளமை புதிய உண்மைகளை வெளிக் கொணரத் துணை செய்வதாகும்.

இந்திய மெய்ந்நூலிலை விளக்கிக் காட்ட உறுதுணையாக உள்ள உபநிடதங்களும் காட்சியியல் நூல்களும் (தரிசனங்கள்) சமற்கிருத மொழியில் உள்ளன. வேதாந்தம் என வழங்கலாகும் உபநிடதங்களும் வேதாந்த சூத்திரம் என வழங்கலாகும் பிரம சூத்திரமாகிய உத்தர மீமாம்சையும் கிறித்தவர்களின் புதிய ஏற் பாட்டுக் கோட்பாடுகளை அடியொற்றி அமைந்துள்ளன.

பால் தியூசன் (Paul Deussen) என்னும் மேலை நாட்டறிஞரும் தமது நூலில் விளக்கிக் காட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

பழைய ஏற்பாட்டில் எங்ஙனம் பலி முறைகள் குறிக்கப்படுகின்றனவோ அங்ஙனம் வேதங்களில் பலிகள் குறிக்கப்படுகின்றன; புதிய ஏற்பாட்டில் எங்ஙனம் பலிநிறை வேற்றமடைந்து புதிய கோட்பாடுகள் உருவாயினவோ அங்ஙனம் வேதாந்தத்திலும் புதுமையான கோட்பாடுகள் தோன்றலாயின. எனவே, வைதிகத்தைப் பழைய ஏற்பாடாகக் கொண்டால் வேதாந்தத்தைப் புதிய ஏற்பாடாகக் கொள்ளலாம். இதனால், பழைய ஏற்பாடும் வைதிகத்தைக் கூறும் வேதங்களும் அப்படியே ஒத்தவை என்றோ, வேதாந்தமும் கிறித்தவமும் அப்படியே ஒத்தவை என்றோ எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை.

வேதங்களில் ஏக தெய்வக் கோட்பாடு இல்லை. கோயில் வழிபாடும் இல்லை. பழைய ஏற்பாடு ஏக தெய்வக் கோடபாட்டையுடைய மிக மிக வளர்நிலை பெற்ற ஆன்மிக வரலாற்று நூலாகும். ஆனால், வேதாந்தம் உருவாவதற்குப் புதிய ஏற்பாட்டுக் கொள்கைகள் மிகுதியும் துணை நின்றுள்ளன என்பது நன்கு புலனாகிறது. எனவே தான், பால்தியூசன்,"உபநிடதங்களின் அடிப்படையிலமைந்த பாதராயணரின் நூல் புதிய ஏற்பாட்டுக் கிறித்தவ சமயச் சித்தாந்தங்களுக்குப் பொருந்துவதாய் அமைந்துள்ளது. அது கடவுள் பற்றிய போதனைகள் உலகம், ஆன்மா, அது இயங்கும் இயல்புகள். அதன் விடுதலை போன்றவற்றை ஆய்கிறது. தனக்கு முரண்பட்ட கோட்பாடுகளைக் களைந்து, தம் கோட்பாடுகளை முறையாகச் சேர்த்து இணைக்கிறது. சிறப்பாக மாற்றாரின் தடைகளுக்கு விடையளிப்பதில் அக்கறை செலுத்துகிறது", எனக் குறிப்பிடுகிறார்.

சிதறிக் கிடந்த உபநிடதக் கருத்துக்களைத் தொகுத்து முறைப்படுத்திக் கூறும் முயற்சியின் விளைவாகவே பிரமசூத்திரம் கட்டமைதி பெற்றுள்ளதாகத் திகழ்கிறது. என்றாலும் பிரமசூத்திர நூற்பாக்கள் சுருக்கெழுத்தாளர் ஒருவர் குறிப்பெடுத்ததைப் போன்று, விளக்கமுற அமையாமல் இயற்றப்பட்டுள்ளன. எனவே, நூற்பாக்களைப் புரிந்து கொள்வதற்கு உரையாசிரியர்களை நாடவேண்டிய நிலை உள்ளது.

இங்ஙனம் உரை வருத்தவருள் சங்கரர். இராமானுசர், மாத்துவர் முதலியோர் சிறப்பாகத் திகழ்கின்றனர். சங்கரரின் உரை அத்துவித நோக்கில் அமைந்து, 'அகம் பிரமாஸ்மி'-'நானே கடவுள்'-என்ற கடவுள் மறுப்புநிலையில் அமைந்ததால், அவ்வுரையை மறுத்தும் எதிர்த்தும் இராமானுசரும் மாத்துவரும் எழுதலாயினர். இவ்விருவருக்கும் பின்வந்த ஆசிரியர் சிலரும் எழுதிய விளக்கங்களும் இன்று உள்ளன.

உபநிடதங்கள், பிரமசூத்திரம், பகவத் கீதை ஆகிய மூன்றையும் 'பிரத்தானத் திரையி' எனப் பெரியோர் குறிப்பிடுவர். இம் மூன்று அடிப்படை நூற்கருத்துகளுக்கும் எழுதப்பட்ட உரைகளே அத்துவிதம், விசிட்டாத்துவிதம், துவிதம் என்ற மூன்று விதமான மெய்ந்நூற் கருத்துகளாக உருப்பெற்றுள்ளன.

அடுத்து, வேதாந்தத் திற்கும் கிறித்தவத்திற்கும் உரிய கருத்தொற்றுமைகளைக் கீழ்வரும் பகுதியில் சுருக்கமாகக் காணலாம்.

# வேதாந்தமும் கிறித்தவமும்

## *1. ஒருமைக் கோட்பாடு (ஒரு கடவுள்)*

வேதாந்தத்தில் கடவுள் பிரமன் என்று சுட்டப்படுகிறார். உபநிடதங்களில் கடவுளுக்குரிய இலக்கணம் மிகச் சிறப்பாகக் குறிக்கப் பட்டுள்ளது. கடவுள் எல்லாவற்றையும் படைத்தவர். அவரே அனைத்திற்கும் மூலமானவர். எல்லா முற்றறிவும் உடையவர். எல்லாவற்றுக்கும் மேலான ஆற்றலுடையவர். அனைத்தையும் கடந்தவர். இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். தைத்திரிய உபநிடதம் மிகச் சுருக்கமாகவும் அழகாகவும் பிரமன் யார் என்று இலக்கணம் வகுத்துக் காட்டுகிறது.

யதோ வா இமானி பூதானி ஜாயந்தே
ஏன ஜாதனி ஜீவந்தி
யத் பிரயந்த்ய பிசம் விஸந்தி
(தைத்திரிய உபநிடதம் II.1.9)

“எல்லாப் பொருட்களும் எதிலிருந்து பிறந்து, எங்கு வாழந்து, எதனிடத்திற்குத் திரும்புகிறதோ அதுவே பிரமன்”, என்பது முற்குறித்த சமற்கிருதப் பகுதியின் விளக்கமாகும்.

“கடவுளை எவர் ஒருவர் நம்புகிறாரோ”, அவர் இவ்வுலகம் கடவுளால் படைக்கப்பட்டது என்பதையும் நம்புகிறார். கடவுளை ஏற்றுக் கொள்ளாத ஒருவர், இவ்வுலகத்தில் உள்ளவை அனைத்தும் இயற்கையானவை என நம்புகிறார். ஆனால் கடவுட் கோட்பாட்டுச் சமயங்களனைத்தும், ‘அவனன்றி ஓர் அணுவும் அசையாது’ என்னும் அசையாத நம்பிக்கையில் செயலாற்றுபவை.

இவ்வழியில் விவிலியத்தை அடிப்படையாகக் கொண்ட இசுரவேலர், யூத, கிறித்தவ சமயங்கள் தமது நம்பிக்கையின் ஆதாரமாகக் கடவுளே படைப்பாளர் என்பதில் உறுதியுடையவை யாதலால், தமது திருமறையின் தொடக்கத்தில், உலகப் படைப்பை முதலாவது விளக்கிக் காட்டிப் பின்னர்த் தம் வரலாற்றைத் தொடர்ந்து கூறுவதாய் அமைத்துள்ளனர். வேதாந்தமும் அவ்வாறே அமைந்திருப்பது மனங்கொளத் தக்கது.

மறைநூல்களே உலகப் படைப்பை விளக்குகின்றன. மறை நூற்பகுதியின்றேல் படைப்பையும் விளங்கிக்கொள்ள இயலாது; படைப்பாளராகிய கடவுளையும் விளங்கிக்கொள்ள இயலாது. வேதாந்தம் இதனை, ‘சாஸ்திர யோனித் வாத்’ எனக் குறிப்பிட்டுச் சொல்கிறது. அதாவது, மறைநூல்களில் இது சொல்லப்படுகிறது என்று பொருள். வேதாந்த சூத்திரமாகிய பிரமசூத்திரத்தின் தொடக்கத்தில் பிரமன், ‘ஜன்மாதி’ (பிரம சூத்திரம் 1.1.2) – பிறப்புக்கு மூலமானவன்-என்று குறிக்கப்படுகிறது.

‘ஜகத் வாசித் வாத்’ (பிரமசூத்திரம் 1.4.16)-எல்லாம் அவன் (பிரமன்) படைப்பு. கடவுளின் படைப்புக்குள் எல்லாம் அடங்கி விடுகின்றன. அவரது படைப்பிற்கு வெளியில் ஒன்றுமில்லை.

கிறித்தவர்கள், கடவுள் என்னும் பெயரைப் பயன்படுத்துவதை விடக் கர்த்தர் என்னும் பெயரை மிகுதியும் பயன்படுத்துவதில் மகிழ்ச்சியடைகின்றனர். கர்த்தா என்றால் உருவாக்குபவர், செய்பவர் என்று பொருள். படைப்பாளராகிய கடவுளைக் கர்த்தர் என்று சொல்லும் வழக்கு இன்றும் உள்ளது.

*மலைகள் தோன்று முன்னும், நீர் பூமியையும் உலகத்தையும் உருவாக்கு முன்னும், நீரே அநாதியாய் என்றென்றைக்கும் கடவுளாயிருக்கிறீர் (சங்கீதம், 90:2).*

என்பது மோசேயின் சங்கீதத்தில் இடம்பெறும் பகுதியாகும். கடவுளே எல்லாவற்றையும் படைக்கிறார். அதனால்தான் சைவர்கள் கடவுளே, ஆதிமூலம் எனக் குறிப்பிடுகின்றனர். தமிழில் சைவர்கள் ஆதி மூலம் என்பதும், வேதாந்தத்தில் 'ஜன்மாதி' என்பதும் கிறித்தவர்கள் 'கர்த்தர்' என்று குறிப்பிடுவதும் ஒன்றுதான்.

ஆதி மூலமாகிய கடவுளை விட்டுவிட்டுப் படைக்கப்பட்ட பொருள்ளுகள் எதுவாயிருந்தாலும் அவற்றை வணங்குவது பாவச் செயலாகும். சூரியனையும், தீயையும், உருவங்களையும் வழிபடுவது, கடவுள் வழிபாடாகாது. உருவ வழிபாடு செய்பவர்கள், 'அவ் உருவங்களில் கடவுள் தங்கியிருக்கிறார்; அதனால், வழிபடுகின்றோம் என்று கூறுவதோ, நாங்கள் சிலைகளையோ உருவங்களையோ வணங்கவில்லை; காணாத கடவுளைப் பூசிப்பதற்கு நாங்கள் கண்கண்ட ஒன்றை முன்னிருத்திக் கொண்டு, சிந்தனைகள் சிதறாதபடி இவற்றை வைத்திருகிறோமேயன்றி, சிலையை வழிபடவில்லை' என்று கூறுவதெல்லாம் வெறும் அமைதியாகுமே தவிர, கடவுளை வழிபடுவதாகாது.

பவுலடிகள் கூறும் பகுதியை இவ்விடத்தில் நினைவுகூறுவது சாலச் சிறந்ததாகும்.

*"உலகையும் அதிலுள்ள அனைத்தையும் படைத்த கடவுள் விண்ணுக்கும் மண்ணுக்கும் ஆண்டவர், மனிதர் கையால் கட்டிய திருக்கோயிலில் அவர் குடியிருப்ப தில்லை" (திருத்தூதர் செயல்கள், 17:24).*

கடவுள் குடியிருக்க விரும்புவதெல்லாம நமது இதயங் களில்தான் என்பதைத் திருறைப் பகுதிகள் பல தெளிவாக விளக்கிக் காட்டுகின்றன. திருமூலர், ‘உள்ளம் பெருங்கோயில்’ ஊனுடம்பு ஆலயம் (திருமந்திரம், 1823) என்று குறிப்பிடுதல் காண்க. ‘கோயில் திருப்பதிக’த்தில் (5) மாணிக்கவாசகர், ‘மனத் திடை மன்னிய மன்னே’ என்று குறிப்பிடுவதும் நோக்கற்பாலது.

படைப்பாளாகிய கடவுள் யாராலும் அறியப்படாதவர், யாரும் கடவுளைக் கண்டதில்லை. மோசே கூடக் கடவுளைக் காண வேண்டுமென்று கடவுளிடம் வேண்டுதல் செய்தார். அவரது முகத் தைக் காணும் பேறு அவருக்குக் கிடைக்கவில்லை. அவர் கடந்து செல்லுமட்டும் கன்மலைப் பிளவில் மோசேயை மூடி மறைத்து விட்டு, அவர் கடந்து சென்ற பிறகே, பின் பகுதியை மோசே காண முடிந்தது என விவிலியத் திருமறை வெளிப்படுத்துகிறது.

காண்பதற்கு அரிதான கடவுள், மாந்தர் எல்லாரும் காணும் படியாக இவ்வுலகில் இயேசு என்னும் பெயரில் பிறந்ததுதான் அவதாரம் ஆகும். கடவுள் மாந்தனைப் போன்று ஊனுடம்பெடுத்து இந்நிலவுலகிற்கு வந்த நிதழ்ச்சியை வேதாந்தம், ‘ரூப உபன்யாசாத்’ (பிரமசூத்திரம், 1.2.23) எனச் சுட்டுகிறது. (பிரம னாகிய கடவுளுக்கு) உருவம் கூறப்பட்டிருக்கிறது என்பது மேற் குறித்த சமற்கிருத சூத்திரத்திற்குரிய பொருளாகும்.

கடவுளின் பிறப்பு தூய்மையான பிறப்பு என்பதை விளக்கு வதுதான் ‘திவ்யம் ஜன்மா’ என வரும் பகவத் கீதையின் தொட ராகும். அருவமான கடவுள் உருவமாக வந்ததுதானே அவதாரம்?

கடவுளின் அவதாரம் என்பது ஒரு வரலாற்று நிகழ்ச்சியாகும். கிறித்தவ சமயம் ஒன்றுதான் கடவுளின் அவதாரத்தை ஒரு வரலாற்று நிகழ்ச்சியாகப் பார்க்கிறது. இது உலக வரலாற்றைக் கி.மு. என்றும் கி.பி. என்றும் பிரித்துக் காட்டுகிறது. வைணவத்தில் கடவுளின் அவதாரம் புராண நிலையில் விளக்கிக் காட்டப்படுகிறது. சாதாரண மக்களுக்குப் புனைகதைகளைக் கூறிக் கடவுளின் அவதாரம் விளக்கிக் காட்டப்படுவதால், கதை புனைவோரின் கற்பனையும் கைவண்ணமும் மிகுதியாகி, பல அவதாரங்களை நம்ப முடியாதபடி செய்து விட்டன. சைவ சமயத்தில் அவதாரக்

கருத்துகள் மெய்ந்நூலியலாக (தத்துவமாக)வும், இறையியலாக வும் விளக்கப்படுகிறது. வேதாந்தத்திலும் மெய்ந்நூலியற் கருத் தாகவே சுட்டப்படுகிறது எனலாம்.

முன்னர்க் குறிப்பிட்டபடி, கடவுளானவர் மாந்தரின் கைகளால் கட்டப்பட்ட திருக்கோயிலில் குடியிருக்காமல் (குடியிருக்க விரும் பாமல்) மாந்தர் தம் உளக்கோயிலில் குடியிருக்க விரும்புகிறார். இதனை வேதாந்தம் 'அந்தர்யாமி வித்தை' என்று குறிப்பிடுகிறது. உபநிடதங்கள் பலவற்றில் அந்தர்யாமிவித்தை குறிப்பிடப்படுகிறது. பிரமன் சூக்கும வடிவினன் எனக் குறிக்கப்படுவதெல்லாம், கடவுளின் அந்தர்யாமி வடிவத்தை விளக்குவதேயாகும்.

பிரமன் பெருவிரல் அளவினன்

(பிரமசூத்திரம், 23.24, 25)

சாந்தோக்கிய உபநிடதம்,

நெல்மணியை விடச் சிறியது ...

கடுகினும் சிறியது,

அவர் என் இதயத்தில் உறையும் ஆன்மா

(சாந்தோக்கியம், 3.14.3)

என்று குறிப்பிடுகிறது.

உள்ளத்தில் இறைவன் உறைகிறான் என்னும் உபநிடத வார்த்தைகள், அவனை நெல்மணி, கடுகு, பெருவிரல் என உரு வகமாக வெளிப்படுகின்றன. திருவள்ளுவர் இதனை, "மலர்மிசை ஏகினான்" (குறள், 3) என்று குறிப்பிடுகிறார். கிறித்தவர் போற்றிக் குறிப்பிடும் தூய ஆவியார் என்பதை, வேதாந்தம் மிகச் சிறப்பித்து விளக்குவது எண்ணிப் போற்றத் தக்கது ஆகும்.

பகவத் கீதை இதனை

அஹம், சர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்ட

(கீதை 15-15)

எனக் குறிப்பிடுகிறது. எல்லாருடைய உள்ளங்களிலும் நான் வீற் றிருக்கிறேன் என்பது இதன் பொருளாகும். கீதை, 'சேத்திரம்',

'சேத்ரக்ஞன்' (13:1) எனக் குறிப்பிடுவதெல்லாம் தூய ஆவியாரைக் குறிப்பிடுவதாகவே அமைகின்றன.

மேலே குறிப்பிட்ட விளக்கப்பகுதிகள் அனைத்தும் வேதாந்தத்தில் கூறப்படும் கடவுட் கோட்பாட்டை விளக்கிக் கூறுவதாக அமைந்துள்ளன. இவ்விளக்கங்கள் கிறித்தவக் கடவுட் கோட்பாட்டு விளக்கங்கள் ஆகும். பிரமனை வேதாந்தம் விளக்கிக் காட்டும் போது, 'பரப்பிரமன்', 'அபரப்பிரமன்', 'தகரப் பிரமன்' ஆகிய மூன்று நிலைகளில் விளக்கிக் காட்டுகிறது, இது கிறித்தவம் கூறும் மூவொரு கடவுளை விளக்குவதாக அமைகிறது. கீழ்வரும் அட்டவணை மூவொருமைக் கோட்பாட்டை விளக்கிக் காட்டுவதாக அமைந்துள்ளது.

| தந்தை<br>God the Father | மகன்<br>God the Son | தூய ஆவி<br>God the Holy Spirit |
|---|---|---|
| பரப்பிரமன் | அபரப்பிரமன | தகரப்பிரமன் |

வேதாந்த சூத்திரமாகிய, பிரமசூத்திரம் இங்ஙனம் விளக்கிக் காட்டும் பகுதிகளை, 'விவிலிய ஒளியில் பிரமசூத்திரம்' என்னும் எனது நூலில் கண்டு கொள்க.

விவிலியத்தின் கடவுட் கோட்பாடே வேதாந்தத்தின் கடவுட் கோட்பாடாக அமைந்துள்ளது. கடவுள் ஒருவரே. அவரது இலக்கணத்தை விளக்குவதில் ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு அளவு கோலைக் கண்டுள்ளது. முற்றும் கண்டறிந்தவர் எவரும் இலர். வேதாந்தம் கண்டறிந்த உண்மைகளை விடப் பின்னர் வளர்நிலை பெற்ற இறையியற் கோட்பாடுகளில் மிகுதியானவற்றையும் காண இயலுகிறது. சைவசித்தாந்தம் கி.பி. 12 முதல் கி.பி. 14 நூற்றாண்டுக் காலக் கட்டங்களில் வளர்ச்சி பெற்றவை. சைவ சித்தாந்தத்தில் பதி இலக்கணம், பசு இலக்கணம், பாச இலக்கணம் என மிக உயர்ந்த நிலையில் பேசப்படுவது போன்ற விளக்கத்தை வேதாந்தத்தில் காண முயல வேண்டுவதில்லை. வேதாந்தத்திலிருந்து தெளிவு பெற்றதுதான் சித்தாந்தம்.

வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்
(சிவப்பிரகாசம், 7)

என்னும் தொடர் இதனை விளக்கிக் காட்டுகிறது. இதைப் போலொத் ததுதான் கிறித்தவ இறையியலாகும்.

வைணவத்தில் தொன்மம் விளக்கப்படுகிறது; சைவ சித்தாந் தத்தில் மெய்ந்நூலியல், இறையியல் விளக்கப்படுகின்றன. ஆனால் கிறித்தவத்தில்தான் வரலாறும், அதனடிப்படையில் இறையியலும் விளக்கப்படுகின்றன. எனவே மேற்குறித்தவற்றில் விளக்கப்படும் கோணங்களில் மாற்றங்கள் காணப்படுகின்றனவே தவிர, அடிப் படையில் மாற்றங்களையும் காண்பது அரிது எனலாம். இவ் வாறிருக்க, ஒவ்வொன்றிலும் விளக்கப்படும் கடவுள் வேறு வேறா னவர் என்று கூறப்புகுவோமாகில் அது நகைப்புக் கிடமாகிவிடும்.

## 2. அவதாரக் கோட்பாடு

மூவொருமைக் கோட்பாட்டில் நடுவணதாகச் சொல்லப்படுவதே அவதாரம். 'அவதாரம' என்னும் சமற்கிருதச் சொல்லுக்குக் 'கீழே இறங்கி வருதல்' என்பது நேர்ப் பொருளாகும். கடவுள் இவ்வுலகில் மாந்தனாகப் பிறந்து வந்ததைக் குறிப்பிடுவதே அவதாரம் என்பதன் விளக்கமாக அமைகிறது.

கடவுள் இந்நிலவுலகில் மாந்தனாகப் பிறந்து மக்களினத்தை மீட்டுக் கொள்வார் என்ற எதிர்பார்ப்பு பழைய ஏற்பாட்டு இசுரயேலரி டம் பன்னெடுங் காலமாகவே இருந்து வந்தது. பழைய ஏற்பாட்டுத் தீர்க்கத்தரிசன நூல்களில் இறைவாக்கினர் பலரால் தலைமுறை தலைமுறையாகச் சொல்லப்பட்டு வந்தது. அந்த இறைவாக்கு இயேசுவின் பிறப்பின் மூலம் நிறைவடைந்தது.

அவதாரக் கோட்பாட்டை முதன் முதலில் உலகிற்குக் கொடுத் தது கிறித்தவ சமயமே ஆகும். ஆரிய வேதங்களில் இக்கோட் பாட்டைக் காண இயலாது என அறிஞர் சுட்டுகின்றனர். எனினும் 'புருச சூக்தம்' போன்ற மறைநூற்பகுதிகளில். கடவுள் பலியாகின்ற செய்தி குறிக்கப்படுகிறது. இச் செய்தி ஆரிய வேதமாகிய இருக்கு வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் குறிக்கப்படுகிறது. இப்பகுதி

ஆரியரால் எழுதப்படவில்லை என்று இருபதாம் நூற்றாண்டை யடுத்து வந்துள்ள ஆய்வுரைகளால் தெளிவாகின்றன. பிரசாபதி, விசுவகர்மா, இரணியகர்ப்பா முதலான கருத்தாக்கங்கள் வைதீக நெறியைச் சார்ந்தவை அல்ல என்றும், வாய்மொழியாகவும் செவி வழியாகவும் வழங்கி வந்தவற்றைத் தொகுத்து எழுத்து வடிவம் கொடுத்தவர் வியாசராகிய திராவிடரே என்றும், அவரே தாம் தொகுத்தவற்றுக்கு வேதம் எனப் பெயர் சூட்டினார் என்றும் இவ் ஆய்வுகள் வெளிப்படுத்திக் காட்டுகின்றன.

வேதாந்தத்தில் அவதாரம் மிகச் சிறப்பாகக் குறிக்கப்படு கிறது. அவதாரத்தை மூலமாக வைத்தெழுத்தப்பட்ட சிறந்ததொரு நூல் கீதை. பசுக்களாகிய உபநிடதங்கள் பொழிந்த பாலே பக வத்கீதை என்பர். ஆரிய நால் வேதங்களுக்கும் கீதைக்கும் தொடர்பில்லை என்பவர் அறிஞர். அவதாரமாக வந்த கடவுளின் அருள் வார்த்தைகளின் தொகுப்பாகக் கீதை உருவாக்கப்பட்டுள் ளது. அவதாரம் என்னும் சொல் கீதையில் இடம் பெற்றிலது.

வேதாந்தம் குறிப்பிடும் கடவுட் கோட்பாட்டில் ஊனுடம் பெடுத்த கடவுளின் உருவத்தைக் குறித்துப் பிரமசூத்திரம் 'ரூப உபன்யாசாத்' என மொழிவதனை முன்னர்க் குறிப்பிட்டோம்.

பரம், அபரம், பராபரம் எனக் கடவுளின் மூவகைப் பரிமா ணங்களை இறையியல் குறிப்பிடுகிறது. பரம் என்பது எல்லாம் கடந்த நிலையைக் குறிப்பது. அபரம் என்பது உருவத்தைக் குறிப்பது. இதில் காலம், இடம், எண் போன்ற வரையறுக்கப்பட்ட எல்லைகள் வகுக்கப்பட்டு விடுகின்றன. காலத்தாலும் இடத்தாலும் பிறவற்றாலும் உட்படுத்த இயலாத பரம் பொருள், அவதாரமாக வரும்பொழுது இவ்வெல்லைகட்குள் அகப்படுத்தப்பட்டு விடுகிறது. இதனால்தான்,

நான் பிறப்பற்றவன்; அழிவற்றவன்;
உயிர்களுக்கெல்லாம் ஈசன்;
எனினும், என் பிரகிருதியை வசப்படுத்தி
ஆத்தமாயையினால் அவதரிக்கிறேன் (கீதை, 4:6)

என்று கீதை மொழிகிறது.

பிறப்பும் இறப்பும் அற்றவர் கடவுள். பிறப்பபையும் இறப்பையும் கடந்தவர் கடவுள். பிரகிருதி அவருக்குட்பட்டது. அவரிலிருந்து வெளிப்பட்டது. அதனை வசப்படுத்தி அவதரிக்கின்ற போது கடவுளுக்குப் பிறப்பும் நேர்ந்தது, இறப்பும். நேர்ந்தது.

கடவுளின் அவதாரத்தைக் குறித்து எபிரேயர் பின்வருமாறு கூறுவது சிந்தனைக்குரியது.

*"பிள்ளைகள் மாமிசத்தையும் இரத்தையும் உடையவர்களாயிருக்க, அவரும் அவர்களைப் போல மாமிசத்தையும் இரத்தத்தையும் உடையவரானார்".*

*(எபிரேயர் 2:14)*

கடவுளே உலகத்தைப் படைத்தார். படைப்புக்கு முன் உலகம் அவருக்குள் இருந்தது. ஆனால், படைப்பாளராகிய கடவுள் அவதாரமாக வந்தபோது, இவ்வுலகத்தில் அவர் இருக்க வேண்டியதாயிற்று. இதற்கு ஒத்ததாக,

*"அவர் உலகத்தில் இருந்தார். உலகம் அவர் மூலமாய் உண்டாயிற்று" (யோவான், 1:10)*

என்னும் திருமறைப்பகுதி அமைந்திருக்கிறது.

மூவொருமைக் கோடபாட்டைக் கிறித்தவ நிலையில் சீர்தூக்கிப் பார்க்கும் ஒருவர். பொதுவாகத் தந்தையாம் கடவுளுக்கு மட்டுமே படைப்பாற்றலை இணைத்துக் காண்பது வழக்கமாயுள்ளது. இயேசு கிறித்துவும் படைப்பாற்றலுக்கு உரிமையுடையவர் என்பதைப் புதிய ஏற்பாட்டின் திருமறைப் பகுதிகள் பல நமக்கு விளக்குகின்றன. மேற்குறித்த (யோவான் 1:10) பகுதி அதற்கொரு சான்று.

*சகலமும் அவர் மூலமாய் உண்டாயின. உண்டான தொன்றும் அவராலேயல்லாமல் உண்டாக வில்லை*

*(யோவான் 1:3).*

*"அவருக்குள் (இயேசு) சகலமும் படைக்கப்பட்டன. பரலோகத்திலுள்ளவைகளும் பூலோகத்திலுள்ளவைகளுமாகிய க்ாணப்படுகிறவைகளும் காணப்படாதவைகளு*

*மாகிய சகல வஸ்துகளும், சிங்காசனங்களா னாலும், கர்த்தத்துவங்களானாலும், துரைத்தனங்களா னாலும், அதிகாரங்களானாலும் சகலமும் அவரைக் கொண்டும் அவருக்கென்றும் படைக்கப்பட்டன."*

*(கொலோசெயர் 1:16)*

சமய அடிப்படையில் அவதாரக் கோட்பாடு விரிவாக இந்தியச் சமயங்களில் விளக்கப்படுகிறது. கீதையில் சொல்லப்படும் அவதாரத்தின் நோக்கம், நல்லோரைப் பாதுகாப்பதற்காகவும் தீயோரை அழிப்பதற்காகவும், அதர்மத்தை அழித்துத் தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் நிகழ்ந்தது என்று விளக்கப்படுகிறது. இது எனது அடுத்த நூலில் (அவதாரமும் கிறித்தவமும்) பேரளவில் விளக்கப்படுகிறது.

## 3. பலி நிறைவேற்றம்

பலி நிறைவேற்றம் இன்னதென்பது பற்றி முன்னரே விளக் கப்பட்டது. சைவ, வைணவக் கோயில்களிலும் முருகன், பிள்ளை யார், சக்தி, ஐயப்பன் கோயில்களிலும் இன்று பலி கொடுக்கப்படு வதில்லை. ஆனால் இக்கோயில்கள் அனைத்திலும் பலி பீடங்கள், ஆகம விதிப்படி அமைக்கப்பட்டுள்ளன. பலி பீடங்கள் இருக் கின்றவே தவிர பலி செலுத்தும் நிகழ்வு நிறுத்தப்பட்டு விட்டது. காரணம்? பலி நிறைவேறி விட்டது!

பலி பீடம் வெற்றிடமாக, ஓர் உண்மையை வெளிப்படுத்தும் சின்னமாக மட்டுமே கோயில்களில் அமைந்துள்ளது. இதற்கான விடையைக் கிறித்தவம் தருகிறது. இயேசு கிறித்து பலியாகி விட்டார். அதனால் பழைய ஏற்பாட்டில் கொல்லப்பட்ட பலி களெல்லாம் நிறுத்தப்பட்டு விட்டன. இயேசு கிறித்துவுக்குள் பலிநிறைவேறி விட்டது. எனவே கிறித்துவுக்குப் பின்னர்த் தோன்றிய சமயங்களிலும் பலி நிறைவேறியதால், பலி முறைச் சடங்குகளும் நிறுத்தப்பட்டு விட்டன.

வேதாந்தமும் பலி நிறைவேற்றத்தைக் கூறும் கருத்து முறை யாகும். எனவேதான் உபநிடதங்கள் வைதீகச் சடங்குகளைக் கண்டித்துரைக்கின்றன. பலி செலுத்தும் போது எழுப்பப்படும்

ஆரவார ஒலியையும் உபநிடதங்கள் கிண்டல் செய்தன. மந்திரங் களை ஓதும் புரோகிதர்களையும் கேலி செய்தன.

பலிமுறையை நிறுத்தி, பிரம வித்தையைக் கற்பிக்கும் புதிய போக்கு வளரத் தொடங்கியது. இதுவே வேதாந்தம் ஆகும்.

பலி நிறைவேற்றத்திற்கும் அவதாரத்திற்கும் நேரடியான தொடர்பு உள்ளது. ஒருவரைப் பிறப்பிலேயே தொடர்ந்து வரும் பாவத்திற்கு நிரந்தரமான கழுவாய் தேவைப்பட்டது. நாள்தோறும் செலுத்தப்பட்டு வரும பலிகள். ஒருவருக்குப் பசி உண்டாவதால் உணவினை உண்டுவிட்டு, மறுபடியும் பசித்த போது அதைத் தணிக்க மீண்டும் உண்பது போன்றதாகும் என மறைநூல்கள் விளக்குகின்றன. மேலும் பிறப்பிலேயே தொடர்ந்து வரும் பாவத்தை ஒருவர் செலுத்தும் பலி நீக்கிவிட இயலாதே! ஆகவேதான் கட வுளே பலியாக வேண்டியதாயிற்று. அப்பலியை நிறைவேற்று வதற்கே கடவுளின் அவதாரமும் தேவையாயிற்று.

## 4. சரணாகதி வழி மீட்பு

ஒருவரிடம் அடைக்கலம் புகுதலே 'சரணாகதி' என வடமொழி யில் வழங்கப்படுகிறது. தன்னிடத்திலுள்ள தகுதி, வலிமை போன்ற எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டு, இவை தமக்கு எவ்விதப் பாது காப்பையும் தாரா என அவற்றின் மீதுள்ள பற்றுகளையெல்லாம் அறவே கைவிட்டு, இறைவனையே சார்வாக, அவரே தமக்குச் சரியான அடைக்கலம் செய்யத்தக்கவர் என முடிவெடுத்து அவரைத் தம் நம்பிக்கையாகக் கொள்வது 'சரணாகதி' ஆகும்.

அரசியலில் கூட, பேராற்றல் பொருந்திய அரசன் ஒருவனிடம் வலி குன்றிய மற்றோர் அரசன் சரணடைந்து விடுகிறான். சரணடை கின்ற போது, அவன் தன்னையே அப்பேரரசனிடம் ஒப்படைத்து விடுகிறான். அப்போது தன்னை அவன் முற்றிலும் தாழ்த்தி, தன்னை முற்றிலும் வெறுமையாக்கி, யாரிடத்தில் தன்னை அடைக் கலப் படுத்துகிறானோ அவரிடத்தில் அளவற்ற நம்பிக்கை கொள் கிறான். அதனால், தனது உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்புக் கிடைக்கும் என நம்பிக்கை கொள்கிறான். உலகியலில் காண லாகும் இந்நிலை போன்றதே ஆன்மீகத்திலும் விளக்கமுறுகிறது எனலாம்.

வைணவ சமயப் பெரியோர்கள் 'பிரபத்தி' என்னும் உயர்ந்த தொரு நெறியைச் சிறப்பித்துக் கூறுகிறார்கள். எந்தவொரு எதிர்ப் பலனையும் கருதாமல் தன்மை முற்றிலுமாக இறைவனிடத்தில் ஒப்படைப்பது என்பது இதன் அடிப்படையாகும்.

இதற்கு இரண்டு உவமைகளை எடுத்துக் காட்டி விளக்கம் தருவர். ஒன்று 'பூனைப் பிடி'; மற்றது 'குரங்குப்பிடி'. அதாவது, பூனையானது தனது குட்டிகளைத் தனது வாயில் கௌவிக் கொண்டு, தனக்கு விருப்பமான இடத்தில் தங்க வைக்கிறது. இதில் குட்டிகளின் செயல் அல்லது முயற்சி ஒன்றுமில்லை. குட்டியானது தன்னை முற்றிலுமாகத் தாய்ப் பூனையிடம் ஒப் படைத்து விடுகிறது. இதனால், எந்த வலிமையும் இல்லாத குட்டி யின் பாதுகாப்பு தாய்ப் பூனையிடம் நிலை பெற்று விடுகிறது. இதைப் போல மாந்தன் ஒருவன் தன் பரம தந்தையாகிய கடவு ளிடத்தில் தன்னை ஒப்படைத்து விட வேண்டும்.

குரங்குப் பிடி என்பது, பூனைப் பிடியிலிருந்து சற்று மாறு பட்டது. இதில் குட்டிதான் தாய்க் குரங்கைச் சிக்கெனப் பிடித்துக் கொள்ள வேண்டும். அப்போது, தாய்க் குரங்கு தாவிச் செல்லும் இடமெல்லாம் குட்டியும் செல்கிறது. தாய் பெறும் இன்பத்தை எல்லாம் குட்டியும் பெறுகிறது. எப்போது குட்டி தன் பிடியைத் தளர்த்தி விடுகிறதோ அப்போது குட்டி கீழே விழுந்துவிடும்; தாய்க்கும் குட்டிக்கும் உள்ள தொடர்பு அற்றுப் போகின்ற போது குட்டிக்குப் பாதுகாப்பும் இல்லாமற் போய்விடும்.

சரணாகதி பற்றிக் கீதை கீழ்க்காணுமாறு வலியுறுத்துகிறது.

"தர்மங்களையெல்லாம் அறவே கைவிட்டு விட்டு
என்னையே சரணடைக.
பாவங்களிலிருந்து உன்னை விடுவிப்பேன்;
வருந்தாதே" - கீதை, 18:66.

கீதை 9:32 இலும் இக்கருத்து வருதல் காண்க.

தர்மங்களைக் கைவிட்டு விடுதல் என்பது தர்மங்களைச் செய்யாதே என்பது கருத்தன்று. தர்மங்களைச் செய்தால் பாவங் களிலிருந்து மீட்புக் கிடைக்கும் என்று நம்பிக் கடவுளை விட்டுவிடக்

கூடாது; அதாவது, ஒருவருடைய மீட்புக்குத் தர்மத்தைச் சார்ந்திருக்கக் கூடாது; கடவுளைச் சார்ந்திருப்பவருக்கு மட்டுமே மீட்புக் கிடைக்கும் என்பது கருத்து. பாவ மன்னிப்பைத் தர்மங்களால் தர முடியாது; கடவுள் ஒருவரால் மட்டும் பாவ மன்னிப்பை வழங்க முடியும். எனவே தர்மத்தின் மீது நம்பிக்கை கொள்ளாதே; பாவ மன்னிப்பை வழங்கத் தகுதியுள்ள கடவுள் மீதே நம்பிக்கை கொள்க என்பது கருத்து ஆகும்.

குயவன் கையில் உள்ள களிமண்ணைக் கிறித்தவர்கள் அடிக்கடி உவமையாகக் கூறுவதுண்டு. களிமண்ணைக் குயவன் கையிலெடுத்து வனையத் தொடங்கும் போது, குயவனின் உள்ளக் கருத்திற்கேற்ப அது பானையாகவோ அகலாகவோ பொம்மையாகவோ வேறு ஏதேனுமொரு பொருளாகவோ உருப்பெறுகிறது. அதைப்போல ஒருவர், தம்மை முற்றிலுமாகக் கடவுளின் திட்டத்திற்கு ஒப்படைக்க வேண்டும் என்பதை இறைமக்கள் அடிக்கடி வற்புறுத்தி வருதல் காண்கிறோம்.

'என்னுடைய தகுதி ஒன்றுமில்லை! நீயே எனக்குக் கதி' எனத் தனது இயலாமையை உணருகின்ற நிலையில், ஒருவர் கடவுள்மேல் கொள்ளுகின்ற நம்பிக்கை வெளிப்படுகிறது. 'எனக்கு ஈடேற்றம் தருகின்றவர் அவரே' என்னும் உறுதிப்பாடு, பற்று எல்லாம் சரணாகதிக்குள் அடங்கிவிடுகின்றன. இதுவே அனைத்திற்கும் மேலானதாகக் கருதப்படுகிறது. ஏனெனில், ஒருவர் மேற்கொள்ளும் செயல்பாடுகளோ முயற்சிகளோ செய்யும் தர்மங்களோ அவரை ஈடேற்ற முடியாது. இவையெல்லாம் நல்லவைதாம். மாந்தராகப் பிறந்த ஒவ்வொருவரும் செய்யத்தக்கவை; செய்ய வேண்டுபவை. இவற்றுக்கும் மேலாக இறைவனைச் சார்ந்து, அவரைச் சரணடைந்து செய்யப்படவேண்டும். 'கிரியை இல்லாத விசுவாசம் செத்தது' எனக் கிறித்தவ மறைநூல் விளம்புகிறது. இதில் 'கிரியை', 'விசுவாசம்' இரண்டுமே தேவையானவை என்று வலியுறுத்தப் பெறுகின்றன.

## 5. கட்டு நிலை

ஒருவரை உயரிய நிலையில் செயலாற்ற விடாதபடி தடை செய்யும் ஆற்றல் அவருக்குள்ளே உறைந்துள்ளது எனச் சமய

நூல்கள் எடுத்துரைக்கின்றன. ‘மாந்தன் பிறக்கின்ற போது விடு தலையுடையவனாகவே பிறக்கிறான். ஆனால் எல்லா வகையிலும் கட்டுண்டவனாகவே காணப்படுகிறான்’ என்று அறிஞர் ஒருவர் குறிப்பிடுகிறார். அவர் குறிப்பிட்டது வேறொன்றை விளக்குவதற்காக. இவ்வாறு அவர் எழுதினாலும், மாந்தனைச் செயல்படாதபடி தடுக் கின்ற தன்மையைப் பலர் விளக்கியுள்ளமை வெளிப்படை.

‘புருடனை’ எவ்வாறோ ‘பிரகிருதி’ கட்டிப் போட்டு விட்டது என்று இந்திய மெய்ந்நூலியல் குறிப்பிடுகிறது. சமண, பௌத்த சமயக் கருத்துகளிலும், ஒருவரின் பிறப்பினைத் தொடர்ந்தே இக்கட்டுநிலையும் கூட வருகிறது என்று குறிப்பிடுவதைக் காணுகிறோம்.

சைவ சித்தாந்தம் இதனை மிகச் சிறப்பாக விளக்கிக் காட்டுகிறது. ‘சகச மலம்’ என்று அது சிறப்பித்துக் காட்டுகிறது. ‘சகஜமலம்’ என்பதைச் ‘சகசமலம்’ என எழுதிக் காட்டுகின்றனர். சக+ஜ+மலம் - உடன், ஜ-பிறந்த, மலம் - பாவம் - ஒருவருடன் கூடப் பிறந்த பாவம் என்று விளக்கம் தரப்படுகிறது.

பிறப்பிலேயே ஒருவரைப் பற்றிநிற்கும் பாவம், இயல்பான பாவமாகச் சுட்டப்படுகிறது. செம்பினில் களிம்பு இருப்பது செம்பின் இயல்பு. புளி, சாம்பல் போன்ற பொருட்களைக் கொண்டு செம் பினைத் துலக்குகின்ற போது அது ஒளியுடன் துலங்குகின்றது. ஆனால் சில நாட்கள் சென்றபின்பு, ஒளி மங்கிப் பழைய நிலையை அடைந்து விடுகிறது. காரணம் அதில் களிம்பு சேர்ந்து விடுகிறது. இதைப் போன்றதுதான் உலகில் மாந்தராகப் பிறந்த ஒவ்வொருவருடைய நிலையும்!

வேதாந்தம் இதனை ‘ஜன்ம பந்தம்’ என்று குறிப்பிடுகிறது. ‘பந்தம்’ என்றால் ‘கட்டு’ என்று பொருள். பிறப்பிலேயே கட்டுப்பட்ட நிலைக்கு ‘ஜன்ம பந்தம்’ என்று பெயர் கூறப்படுகிறது.

சமய நூல்களில் மாந்தன் ஒருவன் இருநிலைகளில் கட்டப் படுவதாகக் குறிக்கப்படுகிறது. பிறப்பிலேயே ஒருவரைத் தொடர்ந்து வரும் கட்டுநிலை ஒன்று; தாம் செய்யும் தீய செயல்கள் மூலமாக வரும் கட்டு நிலை ஒன்று. பிறப்பு வழித் தீமை; செயல் வழித் தீமை – இவை இரண்டும் ஒருவரைக் கட்டுகின்றன.

'ஜான் பனியன்' என்னும் மேலை நாட்டு ஆன்மீகர் 'மோட்சப் பயணம்' என்னும் நூல் ஒன்றை எழுதினார். இந்த நூலையும் கிறித்தவத் திருமறையையும் துணை நூல்களாகக் கொண்டு எ.ஆ. கிருட்டிணப்பிள்ளை என்னும் கிறித்தவக் கம்பர் 'இரட்சணிய யாத்திரிகம்' என்னும் மாபெரும் கிறித்தவக் காப்பியத்தை இயற்றினார். கிறித்தியான் என்ற ஆன்ம விசாரியை நூலில் அறி முகம் செய்யும் போது, அவனுடைய முதுகிலே ஒரு மூட்டை – பாவச் சுமை – அவனை அழுத்திக் கொண்டிருப்பதால் அவனை முன்னேறவிடாதபடி அது அழுத்தித் தடுத்துக் கொண்டிருப்பதாகச் சித்திரிக்கிறார். கிறித்தியானின் மோட்சப் பயணத்தில் அவனது முன்னேற்றத்தில் இது மாபெரும் தடையாக விளங்கியது.

ஆன்ம ஈடேற்றப் பயணத்தை மேற்கொள்ளும் நம் ஒவ்வொரு வருடைய வாழ்விலும் இயல்பாக அமைந்துள்ள கட்டுநிலையாக மேற்குறித்த சித்திரம் விளக்கிக் காட்டுவதாக அமைந்துள்ளது.

இயல்பாக அமைந்துள்ள பாவக்கட்டு ஒருபுறம்; அன்றாட வாழ்வில் நாம் செய்யும் பாவக்கட்டுகள் ஒருபுறம். இரண்டு விதமான கட்டுகளும் நமது ஆன்ம ஈடேற்றப் பயணத்திற்கு முட்டுக்கட்டை களாக அமைந்து விடுகின்றன.

பிரம சூத்திரம் இவற்றை, "உத்தர பூர்வ அத்யோ:" என்று குறிப்பிடுகிறது. இதற்கு விளக்கமாக, 'ஜன்ம பந்தம்' 'கர்ம பந்தம்' எனப் பகவத் கீதை காட்டுவன அமைந்துள்ளன. 'பூர்வ பந்தம்' என்பது தொடக்கக்(பூர்வ) காலத்தில் நிகழ்ந்த கட்டு நிலையையும், 'உத்தர பந்தம்' என்பது நிகழ் காலத்தில் நிகழும் கட்டு நிலையையும் சுட்டுகின்றன.

பிறப்பிலேயே பாவம் என்னைத் தொடருகின்றது என்றால், அப்பாவத்திற்கு நான் காரணன் அல்லனே! 'என் தாய் என்னைப் பாவத்தில் கருத்தரித்தாள்' எனத் தாவீதரசன் கதறிப் புலம்பும் போது, அவர் கருவிலேயே அப்பாவம் அவரைப் பற்றிக் கொண்டது என்னும் உண்மையைப் புலப்படுத்துகிறது. கருவிலே அவரைப் பற்றிய பாவத்திற்கு அவர் காரணமாயிராமல் அவரது பெற்றோர் காரணராகின்றனர். அப்பெற்றோரைக் கருவிலே பற்றிய பாவத்திற்குப் பெற்றோரின் பெற்றோர் காரணர்... இப்படியே பின்னோக்கிச்

சென்றால் ஆதிப் பெற்றோரே காரணர் என்பது விடையாக அமையும். இதுதான் ‘பூர்வ பந்தம்’ என்று வேதாந்தத்தில் விளக்கப் படுகிறது. பூர்வ பந்தம் என்பதை ‘ஆதிப் பழி’ என்ற தொடரால் குறிப்பிடலாம்.

கிறித்தவத் திருமறையை விலக்கி, வேதாந்தம் குறிப்பிடும் கட்டுநிலையை விளக்கிக் காட்டுதல் அரிதாகும். முதல் மாந்தனாகிய ஆதாமின் பாவம், அதன் வழி மாந்தவினம் அனைத்தும் சாவுக்குள்ளாகத் தீர்க்கப்பட்டது; அவன் மூலமாக இவ்வுலகமே சாபத்திற்குள்ளானது – என்பன சமய நூல்களில் எவ்வாறு விளக்கப்படுகிறதோ அவ்வாறே வேதாந்தத்திலும் விளக்கப்படுகிறது. ஆனால் இந்தக் கட்டுநிலை வந்த வரலாற்றை விவிலியத் திருமறை விளக்கிக் காட்டுவது போல வேதாந்தம் விளக்கிக் காட்டவில்லை. இங்கு வரலாறு காட்டப்படவில்லையே தவிர அடிப்படைக் கருத்துகள் மெய்ந்நூலியற் கூறுகளாக அமைந்துள்ளன.

ஆன்மா இயல்பிலேயே கட்டுண்டு கிடக்கின்ற நிலையைச் சீடாசாரம் பின்வரும் பாடலொன்றில் விளக்கிக் காட்டுகிறது:

“கட்டுண்ட கள்வன் தானோ கட்டினை விட்டுக் கொள்வான்
விட்ட வேதனையைத் தீர்க்க விடுவிப்பான் ஒருவன்வேண்டும்
அட்டமா சித்தியைக் காலறி வினால்அ றியலாகும்
தட்டறப் பாசம் நீக்கத் தற்பர குருவே வேண்டும்”

இயல்பாகவே கட்டுண்டு கிடக்கிறது ஆன்மா! கட்டுண்டு கிடக்கும் கள்வனாகிய இந்த ஆன்மா, கட்டினைத் தானாகவே அவிழ்த்து விடுவித்துக் கொள்ளமுடியாது. கட்டினால் துன்புறும் ஆன்மாவைக் கட்டவிழ்த்து விடுதலையாக்க வேறு ஒருவன் வேண்டும். உலகிற் பிறந்த சிற்றான்மாக்கள் எல்லாமே பிறவித் துயராகிய கட்டினால் துன்புற்றுக் கொண்டிருக்கும்போது, ஒரு சிற்றான்மா மற்றொரு சிற்றான்மாவைக் கட்டவிழ்த்து விடுதலையாக்க முடியாது. அப்படியானால் யார்தான் ஆன்மாவைக் கட்டவிழ்த்து விடுதலையாக்க முடியும்? ஒரே ஒருவரால்தான் இச்செயலைச் செய்ய முடியும். அவர்தான் பரம்பொருளாகிய கடவுள். பிரமனாகிய அவர் இவ்வுலகில் நம்மைப் போன்ற உருவில், குருவாக வந்து கட்டினை நீக்க முடியும். இதனை விளக்கிக்

கூறுவதுதான் மேற்குறித்த பாடல். கட்டுநிலை பற்றி விளக்கும் வேதாந்தம் பாவ மன்னிப்புக்குறித்தும் விளக்கிக் கூறுவது சிந்த னைக்குரியதாகும். அது பற்றியும் சுருக்கமாக் கீழே காணலாம்.

## 6. பாவமன்னிப்பு

சமய நூல்களில் பாவ மன்னிப்பு என்பது பற்றிய கோட்பாடு விளக்கப்படுவது போல வேதாந்தத்திலும் விளக்கப்படுகிறது. கடவு ளின் கட்டளையை மீறுவதே பாவம் என்று சமய நூல்களில் காண்கிறோம். கடவுளின் விருப்பத்திற்கு எதிரான சிந்தனை, சொல், செயல் ஆகிய மூன்றுமே பாவச் செயல்களாகக் கருதப்படுகின்றன. இவற்றை மனம், மொழி, மெய் முதலியவற்றால் வரும் பாவம் என்று குறிப்படுவர். மனம், வாக்கு, காயம் எனவும் இவை சுட்டப் பெறும். இவற்றைத் 'திரிகரணங்கள்' என்பர். இம்மூன்றன் வழி பாவஞ் செய்யாது காப்பதே 'திரிகரண சுத்தி' என விதந் தோதப்படுகிறது.

பாவத்திற்கு மன்னிப்பைக் கடவுள் அருளுகிறார் என்பதே மாந்தவினத்திற்குக் கிடைத்துள்ள நம்பிக்கை ஆகும். அப்படி யானால் பாவம் செய்கின்ற ஒருவர் அதனைக் கடவுளிடத்தில் முறையிட்டு அதற்கு மன்னிப்பருளும்படி வேண்டுதல் செய்வ தும் தேவைப்படுகிறது.

அருளின் மொத்தவுருவமாக விளங்கும் பரமன், ஒருவர் பாவஞ் செய்வாரானால் தாமாகவே மன்னித்து விடமாட்டாரா? இக்கேள்வி சாதாரணமாக ஒருவர் மனதில் தோன்றுவது இயல்புதான்.

உலகியல் நிலையில் கூட, ஒருவருக்கு எதிராக மற்றொருவர் தீமையொன்றைச் செய்து விடுகின்றபோது, தீமை செய்தவர் மன்னிப்புக் கேட்கின்றவரையிலும், அவர் செய்த தீமை – தீமை யாகவே நிலைத்து விடுகிறது. சில வேளைகளில் ஒருவர் பேசிய தடித்த வார்த்தைகள் அடுத்தவர் மனத்தில் ஆறாத வடுவாக நின்றுவிடுகிறதே! அதனால் அவ்விருவருக்கும் எத்தனையோ காலங்களாகப் பேச்சுவார்த்தை இல்லாமல், அவர் வீட்டில் நிகழும் நல்லது கெட்டதற்குக்கூடப் போய்க் கலந்து கொள்ளாமல் இடை வெளி ஏற்பட்டு நின்றுவிடுகிறதே! எனவே அவ் இடைவெளி

மறைந்து மறுபடியும் பழைய உறவு தொடர வேண்டுமானால் மன்னிப்புக் கேட்பதும் இன்றியமையாத ஒன்றாக அமைந்து விடுகிறது.

இதுபோன்றதுதான் கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள முறைப்பாடு. பாவத்தால் ஏற்படும் விரிசலைப் போக்க மன்னிப்புக் கோரல் என்பதும் தேவையாகிறது. அதுவே அந்த விரிசலைப் போக்கிக் கடவுளோடு கொள்ள வேண்டிய உறவைப் புதுப்பித்துத் தருகிறது. எனவே பாவ அறிக்கையும் பாவ மன்னிப்பும் இணைந் தவை என்பது புலப்படும்.

பாவத்திற்கு கழுவாயாகவும் நன்றிக்கு அடையாளமாகவும் பலிகள் செலுத்தப்பட்டு வந்தன. இது பழைய ஏற்பாட்டு வழிபாட்டு முறை. 'இரத்தம் சிந்துதல் இல்லாமல் பாவ மன்னிப்பு இல்லை' என்பதே சிறப்பித்துச் சொல்லப்பட்டு வந்த பழைய ஏற்பாட்டுப் பலிமுறை கிறித்துவுக்குப் பின் தோன்றிய உலகப் பெருஞ்சமயங் களில் பழைய பலிமுறைச் சடங்குகள் நிறுத்தப்பட்டு விட்டன. கடவுளே மாந்தனாக அவதரித்துத் தம்மைப் பலியாக ஈந்தமையால் பலிமுறைச் சடங்குகள் அனைத்தும் நிறைவேறி விட்டன. எனவே பலி செலுத்துவதும் நிறுத்தப்பட்டு விட்டது.

ஆனால் பலி நிறைவேற்றத்தின் இடத்தினைத் தியானமானது பிடித்துக் கொண்டது. இதனை வேதாந்தம் சிறப்பாக வலியுறுத்திக் காட்டுகிறது. வேத வழிபாட்டில் வழக்கிலிருந்து வந்த செங்கற் பலி பீடங்களும் அவற்றின் மீது கொளுத்தப்பட்ட தீயும் வேதாந்தத் தில் மனத்தால் மூட்டப்படும் தீயாகவும் மானசச் சடங்காகவும் மடைமாற்றம் செய்யப்பட்டன.

தியானம் கடவுளை நோக்கிச் செய்யப்படுவதால் ஒருவரது பாவங்கள் சுட்டெரிக்கபடுகின்றன. பருத்திச் செடியில் விளையும் பஞ்சு, நெருப்பில் எறியப்படும் போது, நெருப்பு எப்படிப் பஞ்சினைச் சுட்டெரிக்கிறதோ அவ்வாறே தியானம் செய்யும் போது பாவமும் சுட்டெரிக்கப்படுகிறது எனச் சாந்தோக்கிய உடநிடதம் கூறுகிறது.

பலி செலுத்துவதன் நோக்கங்களுள் ஒன்று பாவத்திற்குக் கழுவாய் தேடுவது ஆகும். பலியாகிய சடங்கு தியானமாக

மாற்றம் பெறுவதால், தியானத்தின் நோக்கங்களுள் ஒன்று பாவத்தினை அறிக்கையிட்டுப் பாவமன்னிப்பைப் பெறுவது ஆகும். பழைய ஏற்பாட்டின் பலி முறையும்; புதிய ஏற்பாட்டின் பலி நிறைவேற்றமும் பாவ மன்னிப்பை விளக்குவன என்பது வெளிப்படை.

புதிய ஏற்பாட்டில் இயேசு பெருமான் விளக்கிக் கூறிய 'மனந் திருந்திய மைந்தன்' என்னும் உவமைக் கதையின் உட்கருவாகப் பாவமன்னிப்பு விளங்குவதை நாம் அறியலாம். இளைய மைந்தன் தனது உரிமைப் பங்கினைத் தந்தையின் சொத்துகளிலிருந்து பிரித்து வாங்கிக் கொண்டு, வேறொரு நாட்டுக்குச் சென்று பாவ வழியில் தனது சொத்துகளை அழித்து வறியவனாயினான். தனக்குப் பிழைப்பு வேண்டுமே எனக் கருதிய அவன் குடியானவன் ஒருவனிடம் பன்றி மேய்க்கும் தொழிலை மேற்கொண்ட அவனுக்குப் பெரும் பசி உண்டாயிற்று. எனவே, பன்றிக்கு வைத்த தவிட்டைக் கூட அவன் உண்பதற்கு உந்தப் பட்டான். அதுவும் தனக்குக் கிடைக்காத நிலையில், தன் தந்தையின் வீட்டிலுள்ள பணியாளர் உண்ணும் கொழுமையான உணவை நினைத்து ஏங்கினான். எனவே, தனது தந்தையின் அன்பு அவனை முன்னிருந்து இழுத் திட, அல்லல் செய் பசிப்பிணி பின்னிருந்து அவனைத் தள்ளிட, தன் தந்தையை அடைந்து தன் குற்றங்களை அறிக்கையிட்டான். அவன் செய்தபாவ அறிக்கையை இரட்சணியக் கவிஞர் கிருட்டிண பிள்ளை,

எந்தையே எந்தையே என்றேங்கி நெட்டுயிர்த் துக்கண்ணீர்
சிந்திநொந் துமக்குமுன் னும்தெய் வத்துக் கெதிருமாகப்
புந்தியற் றளவிற் பாவம் புரிந்தனன் இனியாம்
உந்தன் மைந்தனென் றுரைக்கத் தானும்
அபாத்திரன் மதியொன்றில்லேன்"

என்னும் பாடல் வழிப் புலப்படுத்துகிறார்.

தந்தையோ அவனை மன்னித்து அவன் செய்த குற்றங்களை நினையாமல் தனது மகனாகவே ஏற்றுக் கொண்டார். தன் மகன் தொலைந்து போய், மறுபடி கண்டுபிடிக்கப்பட்டதாகவும், இறந்து

போன அவன் திரும்ப உயிர் பெற்றதாகவும் உளம் மகிழ்ந்து பூரித்ததோடு பெரிய ஆரவாரத்தோடு கூடிய விருந்தினையும் ஒழுங்கு செய்து எல்லாரோடும் சேர்ந்து களித்திருந்தனர் என்று அக்கதையைக் கூறியதன் வாயிலாக, பாவங்களை அறிக்கையிடும் பாவி எவராயினும் அவருக்குப் பாவமன்னிப்பை அளித்து வைப்பதன் மூலம் மேலுலகத்திலும் மனந்திரும்பியவர் நிமித்தமாக ஆனந்தக் களிப்பு உண்டாகும் என்று இயேசு பெருமான் விளக்கமளிக்கிறார்.

இயேசு கிறித்து உயித்தெழுந்த பிறகு அவர்தம் மாணாக்கருக்குக் காட்சி கொடுத்த போது, உலகத்திலுள்ள மக்களனைவருக்கும் மனந்திரும்புதலும் பாவ மன்னிப்பும் அறிவிக்கப்பட வேண்டும் எனக்குறிப்பிடுவது நோக்கற்பாலது. லூக்காவின் நற்செய்தி நூலில் இது குறிக்கப்பட்டுள்ளது.

*"மனந்திரும்புதலும் பாவ மன்னிப்பும் எருசலேம் தொடங்கிச் சகல நாட்டினருக்கும் அவருடைய நாமத்தினாலே அறிவிக்கப்பட வேண்டும்" (லூக்கா 24:47).*

மனந்திரும்புதலென்பது, பாவ வாழ்விலிருந்து முற்றிலும் விலகித் தூய வாழ்வை நோக்கிப் பயணம் செய்வது ஆகும். பாவமன்னிப்பு என்பது, ஒருவர் தம் பாவச் சிந்தனை, சொல், செயல் ஆகிய மூன்றையும் இறைவனிடத்தில் அறிக்கையிட்டு அவரிடமிருந்து மன்னிப்பைப் பெற்றுப் புது வாழ்வு வாழ்வது ஆகும். பாவ மன்னிப்பைப் பெற்ற ஒருவர், மறுபடியும் உலகியலில் சிக்குண்டு துன்புறாதபடி இறைவனை இடையறாது தியானித்து, உலகியலை மேற்கொள்ள இறைவனின் உதவியை வேண்டி நிற்பது ஒருவருக்கு வேண்டற்பாலதாக மறைநூல்கள் வழிகாட்டுகின்றன. வேதாந்தமும் பல நிலைகளில் தியானத்தைக் குறித்துப் பல்வேறு பகுதிகளில் விளக்கிக் காட்டுவதை நாம் அறிந்து கொள்ளலாம்.

## 7. முத்தி

மாந்தர் ஒருவரது வாழ்வின் இறுதிக் குறிக்கோள் முத்தி அல்லது மோட்சமாகிய வீடுபேறு ஆகும். ஆன்மீக விடுதலை என்பதாகவும் இது குறிக்கப்படுகிறது. வீடு பேற்றை விளக்கும்போது

இறைக் கோட்பாட்டுச் சமயங்கட்கும் இறை மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்கட்கும் வேறுபாடுகள் உள.

மோட்சம், நரகம் என விளக்கப் பெறுவன எல்லாம் முழுக்க முழுக்க நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்தவை. இவற்றை அறிவியல் அடிப்படையில் விளக்கிக் காட்டுவது மிகவும் அரிது. எனவே சமய நூல்கள் அல்லது சாத்திரங்களை சார்ந்து இவற்றுக் குரிய விளக்கங்களைப் பெற வேண்டியுள்ளது. கிறித்து பெருமா னின் காலத்திற்குப் பிறகே மோட்சம், நரகம் முதலியவற்றின் கருத்து முறைகள் வலுவாகப் பேசப் பெறுகின்றன எனலாம். பழைய ஏற்பாட்டு மறைநூல்களில் இவை பற்றிய சிந்தனைகள் வளரவில்லை எனத் தோன்றுகின்றது.

இம்மை என்பது கண்கூடாகக் காணுகின்ற வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டது. மறுமை என்பது பெரும்பாலும் ஒருவரது மரணத்திற்குப் பின் அமையப்போகின்ற எதிர்கால நிகழ்வுகளை அடிப்படையாகக் கொள்வது. இதை மறைநூல்கள் கூறும் வெளிப்பாடுகளை அடிப்படையாக வைத்துத்தான் ஊகித்தறிய முடியும்.

ஒருவரது இறப்புக்குப் பின் அன்னாரது பருவுடல் இயற்கை யின் கூறுகளாகிய பஞ்சபூதங்களுடன் கலந்து விடுகிறது. அவர வரது நம்பிக்கையின் அடிப்படையில் அவரது உடல் மண்ணில் புதைக்கப்படுகிறது அல்லது எரியூட்டப்படுகிறது. சில சூழல்களில் விலங்குகட்கும் பறவையினங்களுக்கும் உணவாக விடப்படுகிறது.

உடல் அழிந்துவிடுகிறதே தவிர உயிர் என்ன ஆகிறது என்றோ, ஆன்மா என்ன ஆகிறது என்றோ அறிவியல் கண்டுணர்த்தவில்லை! இதுபற்றி இறையியலாளரும் மறைநூல் வாணரும் பற்பல ஆய்வுக் கருத்துகளை வெளியிட்டுள்ளனர்.

வேதாந்தத்திலும் மறுமை பற்றிய செய்திகள் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளன. “மரணத்தின்போது பூதவுடல் பஞ்சபூதங்களோடு கலந்து விடுகிறது. ஒருவர் இறக்கும்போது அவரது பேச்சு மனத்தை அடைகிறது; மனம் உயிரை அடைகிறது; உயிர் நெருப்பை

அடைகிறது; நெருப்பு பரம்பொருளை அடைகிறது", எனச் சாந்தோக்கிய உபநிடதம் கூறுகிறது.

உயிர் பிரிகின்றபோது பொறிகளும் ஒடுங்கிவிடுகின்றன. பொறிகள் ஒடுங்குகின்றபோது புனன் நுகர்வுகளும் ஒடுங்கிவிடுகின்றன. ஆனால் உயிரானது பரம்பொருளாகிய கடவுளை அடைகிறது என்பதே மேற்குறித்த சாந்தோக்கிய உபநிடத்தின் கருத்தாகும். 'ஆவி தன்னைத் தந்த கடவுளிடம் திரும்புகிறது' என்று விவிலியத்தில் பிரசங்கி என்னும் நூல் குறிப்பிடுகிறது.

பிரமனை அறிந்த ஒருவர், இவ்வுடலை விட்டுப் பிரிந்தபிறகு ஒளியின் வழியில் மேலே செல்கிறார். கதிரவனின் ஒளி இரவிலும் பரவியுள்ளது. (அதாவது, ஓரிடத்தில் கதிரவன் மறைந்தாலும் பிறபகுதியில் அது ஒளிர்கிறது). கதிரவனின் வடக்கு நோக்கிய செலவின்போது இறப்பவர் பிரமனை அடைவர் என்றும் கதிரவனின் தென்னோக்கிய செலவின்போது இறப்பவர் முன்னோர் ஆவிகளிடம் சேர்ந்து நிலவினை அடைந்து மறுபடியும் இவ்வுலகிற்குத் திரும்புவர் என்றும் உடநிடதங்களில் ஆங்காங்கே குறிப்புகள் காணப்படுகின்றன. மறுவுலகு அடையும் வழிகள் பற்றி வெவ்வேறு கருத்துகள் சொல்லப்படுகின்றன.

மேலே சென்ற ஆன்மாக்களின் கருமங்களுக்கேற்ப, அதாவது, அனுபவித்து எஞ்சியுள்ள கருமங்களுக்கேற்ப உயர்சாதிக் கருப்பையினையோ கீழ்ச்சாதிக் கருப்பையினையோ அடைந்து மறுபடியும் பிறக்கின்றன என்று வருணாசிரம தருமத்தை நிலை நாட்டுதற்கேற்றவாறு சில தவறான விளக்கங்களும் உபநிடதங்களைக் காட்டி எழுதுகின்ற நிலைகளையும் காணுகின்றோம். இவையெல்லாம் தனி ஆய்வுக்குரிவை. மூலநூல்களிலும் பல திரிபுகளும் இடைச் செருகல்களும் சிதைப்புகளும் செய்யப்பட்டுள்ளன என்பதை ஆய்வாளர் பலர் எடுத்துக்காட்டியுள்ளதை நினைவிற்கொள்ள வேண்டும். மூலங்களிலே இங்ஙனம் செய்கின்றபோது உரைகளிலே செய்யப்பட்ட சிதைவுகள், திரிபுகள் எவ்வாறு இருக்கும் என்று கூறத் தேவையில்லை.

வேதாந்தத்தில் கூறப்படும் மறுமை பற்றிய கருத்துகள், கிறித்துவ மறுமைமையியலைத் தழுவியதாக அமைந்துள்ளவற் றைக் காணமுடிகிறது. ஒருவரது இறப்பிற்குப் பின் 'அவரது ஆன்மா மறுமை உடலை எடுக்கிறது' என வேதாந்தம் குறிப்பிடு கிறது. விவிலியத் திருமறை இதனை 'மகிமையின் உடல்' என்று குறிப்பிடுகிறது. கொரிந்தியருக்கு எழுதிய முதலாம் திருமுகம் 15 ஆம் அதிகாரம் 35 ஆம் வசனம் தொடங்கிப் பவுலடிகளார் மிக விரிவாக எழுதுகின்ற செய்திகள் இங்கு நினைவிற் கொள்ளற் பாலன. எனவே இறப்பு என்பது முடிவன்று; இறப்பின் மறுபுறம் உயிர்த்தெழுதல் உண்டு என்னும் கருத்துகள் வேதாந்தத்திற்கும் உரியது என்பதை மறைநூல்கள் விளக்கிக் காட்டுகின்றன.

மறுமையின் சிகரமாக மோட்சமாகிய வீடுபேறு மிகச் சிறப் பாகப் போற்றப்படுகிறது. இயலுலகு அனைத்தையும் படைத்துக் காத்துவரும் பரம்பொருளோடு தங்கி, அழிவற்ற இன்பத்தில் திளைக்கும் மறுமை உலகின் வாழ்வு வீடுபேறு என்றும் 'அமிர தத்துவம்' என்றும் வேதாந்தத்தில் குறிக்கப்படுகிறது. அமிழ்தம் என்றால் சாவாமை தரும் மருந்து என்று பொதுவாகக் குறிக்கப்படு கிறது. அமிழ்தம் என்னும் தமிழ்ச்சொல்லே அமிர்தம் என வட மொழியில் குறிக்கப்படுகிறது.

உலகில் பிறந்த ஒருவர் என்றாவது ஒருநாள் இறந்துவிடுகிறார். உடல் அழிந்து விடுகிறது. அவரை நாம் இவ்வுலகில் மறுபடியும் காண இயலாது. எனவே இறப்பினைவிடக் கொடிய துன்பம் வேறு எதுவுமில்லை. அதிலிருந்து யாரும் விடுபடவும் முடியாது. ஆனால் அந்த இறப்பின் மீதும் வெற்றி உண்டு என்பதுதான் இயேசு பெருமானின் உயிர்த்தெழுதல். இவ் உயிர்த்தெழுதல் அவருக்கு மட்டும் உரியதாய் வைத்துக்கொள்ளாமல் மானிடராய்ப் பிறந்த அனைவருக்கும் உரியதாய்க் கடவுள் அருள்பாலித்திருக் கிறார். சாவினை வென்ற இயேசு பெருமான் மேல் நம்பிக்கை வைக்கின்ற ஒவ்வொருவருக்கும் சாவினை வெல்லும் உரிமை கொடுக்கப்பட்டுள்ளது. இதனை யோவான் நற்செய்தியநூல்

*'என்னில் நம்பிக்கை கொள்பவன் இறந்தாலும் பிழைப்பான்'*

என்று குறிப்பிடுகிறது.

சாவின்மேல் கொள்ளுகின்ற வெற்றியைத் திருக்குறள் 'கூற்றம் குதிக்கும் ஆற்றல்' என்று குறிப்பிடுகிறது.

"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு"

குறள்.269.

என்பது குறள். கூற்றம் குதித்த ஆற்றலை உலகிற்குக் காட்டியவர் இயேசு பெருமான். அந்த ஆற்றலில் தலைப்படும் ஒருவருக்குக் கூற்றம் குதிக்கின்ற ஆற்றல் கைவரப் பெறும் என்பது வள்ளுவப் பெருந்தகையின் வாக்கு.

மோட்சத்தைப் 'பிரமலோகம்' என்று குறிப்பிடுவர். பொது வாக மோட்சம் என்பது குறைவற்ற மகிழ்ச்சி தருகின்ற மேலுலகம் என்று நாம் கற்பனை செய்து கொண்டிருக்கிறோம். இதுபற்றி இராமானுசர் குறிப்படும் பொழுது,'பிரமலோகம் என்பது பிரமனே உலகம்; பிரமனே வீட்டின்பம்' என்று விளக்கம் தருகிறார்.

எனவே கடவுளோடு உடனுறைந்து துய்க்கும் இன்பமே வீடு பேற்றின்பம்; அதுவே முத்தி என்ற விளக்கம் கிடைக்கிறது. சாந் தோக்கிய உடநிடதம் இதுபற்றி மிக அழகாக விளக்கமளிக்கிறது.

"கடவுளோடுகூட இருந்து துய்க்கும்
இன்பத்தில் மூப்புக் கிடையாது;
பசி கிடையாது; சாவு கிடையாது"

என்னும் சாந்தோக்கிய உடநிடதப் பகுதி, திருவெளிப்பாட்டு நூலினை விளக்குவதாக அமைந்திருக்கிறது. கீழ்வரும் பகுதியில் இதனைக் காணலாம்.

*"அவர்களுடைய கண்ணீர் அனைத்தையும் அவர் துடைத்து விடுவார்; இனிமேல் சாவு இராது; துயரம் இராது; அழுகை இராது; துன்பம் இராது; முன்பு இருந் தவை எல்லாம் மறைந்து விட்டன."*

*திருவெளிப்பாடு, 21:4.*

கடவுளோடு உடனுறைந்து துய்க்கின்ற இத்தகு இன்பங் களைத் துய்ப்பதற்கு முடியாமல் போகின்ற நிலையை நரகம்

என்று குறிப்பிடலாம். இறைவனோடு இருப்பது நிலையான இன்பம்; அந்த நிலையை இழப்பது நிலையான துன்பம்; அதுவே நரகம்.

இயேசு பெருமானின் சாயலில் உருவாக்கப்பட்ட முதல் மாந்தன் கடவுளோடு கூடக் கலந்து பேசிக் களித்திருந்தான். அவரது கட்டளையை எப்போது மீறினானோ அப்போது கடவுளோடு கலந்துறவாடும் பேரின்ப நிலையை, ஏதேன் என்னும் இன்ப வனத்தில் நிலைத்திருக்கும் வாழ்வை இழந்தான்; அவன் மூலம் சாவும் அவனது தலைமுறையைப் பற்றிக் கொண்டது. முதல் மாந்தன் எப்பொழுது வீழ்ந்தானோ அப்பொழுதிருந்தே அவனுக்கு மீட்பினைக் கொடுக்கக் கடவுள் வகுத்த அருமருந்துதான் இயேசு பெருமான். இவர் இறுதி ஆதாம். அவர் எந்தப் பாவமும் செய்ய வில்லை. ஆனால் முதல் ஆதாமும்... அவன் தலைமுறையினர் அனைவரும் செய்த பாவத்திற்குப் பரிகாரமாக இரண்டாம் ஆதாம் பலியானார். அவர் பலியானதால்தான் கடவுளையும் மாந்த இனத் தையும் பிளவுபடுத்தியிருந்த பகையாகிய நடுச்சுவர் தகர்க்கபட்டது.

இயேசு கிறித்துவைத் தவிர வேறு எவரும் உலகினரின் பாவத்திற்குக் கழுவாயாகப் பலியாகவில்லை. வேதாந்தத்தில் இயேசுவின் பலி மிக நுட்பமாகக் குறிப்பிடப்படுகிறது. உபநிடதங் களில்,

> 'நானே பலி'
> 'புருசா பலியாயிருக்கிறார்'
> 'பிரசாபதி பலியாயிருக்கிறார்'

என்னும் பகுதிகள் கவனத்திற்குரியன. கீதையிலும் இப்பகுதி இடம் பெறுகிறது..

> 'புருசன் அதி தெய்வம் எனப்படுகிறான்; இனி,
> ஈண்டு தேகத்திலுள்ள நானே பலியாயிருக்கிறேன்'

எனவரும் கீதையின் பகுதிகளை இயேசு பெருமானின் பலி யோடு தொடர்பு படுத்திக் காணுகின்ற போது, கீதை புத்தொளி பெறுகிறது. மீட்பின் செய்தியாக இது திகழ்கிறது.

மீட்பாகிய பொருளை இயேசு பெருமான் ஈட்டி வைத்திருக்கிறார். அதனை ஒருவர் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும். இந்த மீட்பாகிய பொருள் கிறித்தவர்களுக்கு மட்டும் அவர் ஈட்டி வைத்திருப்பதாகச் சிலர் தவறாகக் கருதி வருகின்றனர். அது போல இயேசு பெருமானைக் கிறித்தவர்களுக்கு மட்டுமே உரிய கடவுளாகச் சிலர் எண்ணி வருகின்றனர். அல்ல! அல்ல!! அவர் உலக மீட்பர்.

இயேசு பெருமான் மூலம் உலகம் மீட்கப்பட்டது. எனவே உலகோர் அனைவரும் அவர் விலையின்றிச் சம்பாதித்து வைத்த மீட்பாகிய அரும்பெரும் செல்வத்தை அடைந்து மகிழ வேண்டும்; அந்த மீட்பின் மூலம் வீடுபேற்றின்பத்தை அடைந்து துய்க்க வேண்டும் என்பதே இறைத்திட்டம். இந்த இறைத்திட்டத்தை எவர் ஏற்றுக் கொள்கிறாரோ அவருக்கு அழிவில்லை.

நாம் வாழுகின்ற உலகில் அரசாங்கம் இயற்றுகின்ற சட்ட திட்டங்களுக்கு உட்பட்டால்தான் சீரான வாழ்வு உண்டு. சட்ட திட்டங்களை மீறுபவர்க்கு நடவடிக்கைகளும் தண்டனையும் உண்டு. உலக அரசுக்குரிய நடைமுறை இதுவாகின்றபோது இறையரசுக்குரிய திட்டங்களுக்கு உட்பட்டு அடங்கி வாழ்பவர்க்கு நீடு வாழ்வாகிய பேரின்பமும் அத்திட்டங்களுக்கு உட்படாதவர்களுக்கு உரிய தீர்ப்புகளும் உண்டென்பது நம் சிற்றறிவுக்கு ஓரளவாவது எட்டாதவை அல்ல.

கடவுளின் தீர்ப்பு நாள் என ஒரு நிகழ்வு திருமறையில் குறிக்கப்படுகிறது. அது எப்போது நிகழவிருக்கிறது என்பது எவருக்கும் தெரியாத மறைபொருள். கிறித்தவர்களின் விவிலியத் திருமறையிலும், இசுலாமியரின் திருக்குர் ஆனிலும் நடுத்தீர்வு நாள் பற்றித் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. அப்போது அவரவருடைய செயலுக்கேற்றபடி தீர்ப்பு வழங்கப்படும் என்று எழுதப்பட்டுள்ளது.

*"அவனவனுடைய செயலுக்குத் தக்கதாக நான்*
*அளிக்கும் தீர்ப்பு என்னோடுகூட வருகிறது"*

என்பது திருமறைச் செய்தி. அப்போது நற்செயலுக்குத் தகுந்த பரிசாகிய முத்தியாகிய வீடுபேறும் தீச் செயலுக்குத் தகுந்த தண்டனையாகிய அழிவும் (நரகம்) கொடுக்கப்படும். பகவத் கீதை, வேதாந்தத்தின் ஒரு பகுதி. அதுவும் இது பற்றிக் கூறுகிறது.

‘நல்லோரைப் பாதுகாப்பதற்கும்
தீயோரை அழிப்பதற்கும் நான்
சம்பவிக்கிறேன்’

என்னும் பகுதி, கிறித்தவத் திருமறைப் பகுதியை உறுதி செய்வதாகக் கொள்ளலாம். ‘பாதுகாத்தல்’ என்பது நீடுவாழ்வோடு தொடர்புடையது; அழிவு என்பது நரகத்தோடு தொடர்புடையது.

## 8. மறுபிறப்பு

இந்தியச் சமயங்களில் ‘மறுபிறப்பு’ என்பது முக்கியமான இடத்தைப் பிடித்துள்ளது. விபத்தில் சிக்கி உயிர்பிழைத்து விடுகிறார் ஒருவர்; மாபெரும் நோயினின்று சிறந்ததொரு மருத்துவத்தால் காப்பாற்றப்படுகிறார் ஒருவர்; குழந்தைப் பேற்றுக்குப் பிறகு தாய் பிழைத்துக் கொள்கிறார். உலகியல் சூழ்நிலையில் இப்படிப்பட்டவர்களை ‘மறுபடிப் பிறந்தவர்கள்’ என்று சாதாரணமாகக் கூறுவதைக் கேள்விப்படுகிறோம். மறுபிறப்பு அல்லது மறுபிறவி என்பதற்குத் தாயின் வயிற்றில் நுழைந்து மறுபடிப் பிறந்துவிட்டார் என்று பொருளன்று; அவர் உயிர் போகக் கூடிய பெரும் ஆபத்திலிருந்து தப்பிப் பிழைத்திருக்கிறார் என்பதே பொருளாகும்.

‘கடந்த காலத்தில் ஓரிடத்தில் பிறந்த ஒருவர் பிற்காலத்தில் வேறோரிடத்தில் பிறந்திருக்கிறார்’ என்று ஒரு சில செய்திகள் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பேசப்படுகின்றன. அவற்றுக்கு அறிவியல் சார்ந்த ஆதாரங்கள் எதுவும் காட்டப்படவில்லை. சரி! அப்படிப் பேசப்படும் இத்தகைய நிகழ்வு உலகிலுள்ள கோடிக் கணக்கான மக்கள் ஒவ்வொருவருக்கும் கூறப்பட வில்லையே; ஏன்?

ஒருவர் தாயின் வயிற்றிலிருந்து பிறப்பதும் தெரியும்! பிறந்தவர் இறந்து அழிந்து போவதும் தெரியும். ஆனால் இறந்துபோன

ஒருவர் மறுபடிக் குழந்தையாகப் பிறந்து வருவார் என்பதோ, பிறந்து வந்திருக்கிறார் என்பதோ அறிவியல் உலகில் நிலை நாட்டப்படாதவை.

ஆனால் மறுபிறப்பை வைத்துச் சில சமயக் கொள்கைகள் வளர்நதுள்ளன. சமண, பௌத்த சமயங்களில் இக்கருத்துமுறை வேரூன்றி இருக்கிறது. இச் சமயங்களில் போன பிறவி - இந்தப் பிறவி – அடுத்த பிறவி என்னும் நம்பிக்கை நிலை பெற்றுள்ளது. இந்தக் கொள்கைக்குப் 'பிறவிச் சுழற்சிக் கொள்கை' என்று பெயர். பிறவிச் சக்கரம் சுழன்று கொண்டேயிருக்கும். ஏனெனில் ஒருவர் நன்மை செய்தாலும் அதன் பலனை அனுபவிக்க ஒரு பிறவி எடுக்க வேண்டும்; தீமை செய்தாலும் அதன் பலனை அனுபவிக்க ஒரு பிறவி எடுக்க வேண்டும். விலங்கு கதி, நரக கதி, மனித கதி, தேவ கதி என்று நாற்கதியில் பிறந்து உழல வேண்டும் என்பது இச் சயமங்களின் கோட்பாடு.

பிறவிச் சுழற்சிக் கோட்பாட்டை உறுதியாக நம்புகின்றவர் சமண, பௌத்த சமயங்களைச் சார்ந்தோர் ஆவர். இவ்விரு சமயங்களும் கடவுளை நம்பாத சமயங்கள் ஆகும். எனவே கடவுள் மறுப்பாளராகிய இவர்தம் கோட்பாடுதான் பிறவிச் சுழற்சிக் கோட்பாடு ஆகும். கடவுள் என்று இச்சமயங்கள் யாரைக் குறிப் பிடுகின்றன என்றால், அருக நிலையடைந்தவர்களைத் தாம். உலகைப் படைத்து, காத்து, இயக்கிவருகின்ற பரம் பொருளைக் கடவுளாகக் குறிப்பது இல்லை! அதுபோல, 'வீடுபேறு' என்று இச்சமயங்கள் குறிப்பிடுவது, பிறவியிலிருந்து விடுதலை பெறு வதுதான். கடவுள் கோட்பாட்டுச் சமயத்தார் குறிப்பிடும் வீடு பேறாகிய மோட்சத்தை அன்று.

தொடக்கக் காலத்தில் குறிக்கப்பட்ட சமண, பௌத்த சமயக் கொள்கைகளில் தளர்வுகள் பல நேர்ந்துவிட்டன. கடவுள் நம் பிக்கை இல்லாத சமணரும் பௌத்தரும் மகாவீரரையும் புத்தரையும் கோயில்களில் வைத்துப் பூசித்து வணங்கத் தொடங்கிவிட்டனர். புத்தர், விஷ்ணுவின் பத்து அவதாரங்களில் ஒருவராக மாற்றப்பட்டு விட்டார்!

கடவுள் மறுப்புக் கோட்பாட்டாளரின் நம்பிக்கைகள் சில, கடவுட் கோட்பாட்டுச் சமயங்களிலும் இடம்பெற்று விட்டன. அவற்றில் ஒன்றுதான்! 'பிறவிச் சுழற்சிக் கோட்பாடு' ஆகும். கடவுளை நம்புகின்ற ஒருவர் பிறவிச் சுழற்சியை நம்ப வேண்டுவதில்லை. இந்தப் பிறவியில் ஒருவர் செய்த நன்மை, தீமைக்கு அடுத்த பிறவியே பலன் என்று கடவுள் நம்பிக்கையற்றவர் நம்புகிறார். ஆனால் நாம் செய்யும் நன்மை, தீமைக்குரிய பலன் கடவுளிடத்தில் இருக்கிறது; அவரே தகுந்த பலனளிப்பார் என்று கடவுட் கோட்பாட்டினர் நம்புகின்றனர். அதனால்தான் மாணிக்கவாசகர் போன்ற பெருமக்கள் 'பிறவிப் பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்' என்றும் 'மாயப்பிறப்பறுப்பவன்' என்றும், 'வரும் பிறப்பை அறுத்து ஞானவாரி மடுத்து ஆனந்தம் அருள்பவன்' இறைவன் என்றும் போற்றியுள்ளனர்.

சமண, பௌத்த சமயங்கள் கிறித்துவுக்கு அறுநூறு ஆண்டுகட்கு முற்பட்டவை. சைவ, வைணவம் முதலிய அறுவகைச் சமயங்கள் கிறித்துவுக்குச் சற்றேறக்குறைய ஐந்து நூற்றாண்டு கட்குப் பிற்பட்டவை. எனவே, பிறவிச் சுழற்சியில் நம்பிக்கை வைத்திருக்கும் ஒருவரைக் கடவுளிடம் ஆற்றுப்படுத்த வேண்டு மென்றால், ஏற்கெனவே அவர் வைத்திருக்கின்ற நம்பிக்கையை எடுத்துக்காட்டி, அதற்குத் தகுந்த மறுப்பையோ விளக்கத்தையோ கூறினால்தான் புதிய கோட்பாடுகள் அவரது உள்ளத்தில் இடம் பிடிக்கும். இந்த அடிப்படையில் எழுந்தவைதாம் அறுவகைச் சமயங்கள். வேதாந்தமும் இதே அடிப்படையில் உருவானது ஆகும்.

வேதாந்தம் குறிப்பிடும் மறுபிறப்பு என்பது உடலின் பிறப்பைக் குறிப்பிடாமல் உள்ளம் மாறிப் பிறப்பதைப் பலிவிடங் களில் குறிப்பிடுகிறது. உயிரினங்கள் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை முன்னோர் பகுத்திருக்கின்றனர். மக்களை ஆறறிவுடையவர் என்று குறிப்பிடுகின்றனர். 'மக்கள் தாமே ஆறறிவுயிரே' என்றார் தொல்காப்பியர். மக்களுக்கு மட்டும் தான் ஆறாவது அறிவாகிய பகுத்தறிவு உள்ளது. பகுத்தறிவு முறையாக இயங்கும் ஒருவரால் தான் நிலையான தீமையை அறிந்து, அதை விலக்கிவிட்டு நிலை யான நன்மையை அவரால் நாட முடியும்.

அப்போது இதுவரை தீயவற்றைப் பார்த்த கண்கள் தூய வற்றைப் பார்க்கத் தொடங்குகின்றன. இதுவரை தீய செயல் களுக்காகச் செயல்பட்ட புறஉறுப்புகள் அனைத்தும் நற்செயல் களுக்காகச் செயல்படத் தொடங்குகின்றன. புறக் கரணங்களும் அகக் கரணங்களும் தீமைமை வெறுத்து நன்மைக்கு ஏற்றவற்றைச் செயலாற்றத் தொடங்குகின்றன. சைவம் இதனை 'அசுத்த மாயை', 'சுத்த மாயை' என்று குறிப்பிடுகிறது.

உடலும் ஆன்மாவும் வேறு வேறானவை. உலகில் பிறக் கும் குழந்தை பல பருவங்களைக் கடந்து முதுமையடைந்து இறந்து விடுகிறது. உடல் அழிந்தாலும் ஆன்மா அழிவதில்லை. இம்மைக்குரிய உடல் வேறு; மறுமைக்குரிய உடல் வேறு, இம் மைக்குரிய உடல் பஞ்சபூதங்களால் ஆகியவை; மறுமைக்குரிய உடல் அதனின்றும் மாறுபட்டது. கீதை இதனை அழகாக விளக்கு கிறது.

"பிரமலோகம் வரையில் உள்ள உலகங்களுக்கு
மறுபிறப்பு உண்டு;
என்னை அடைந்தவனுக்கு மறுபிறப்பில்லை"
– *கீதை 8:16*

கடவுளிடம் நம்பிக்கை கொண்ட ஒருவருக்கு மறுபிறப்பு என்பது ஏது?

"பரம பக்குவப்பட்ட மகாத்மாக்கள என்னை அடைந்து
துன்பத்துக்கு
இருப்பிடமும் நிலையற்றதுமாகிய மறுபிறப்பை
எடுப்பதில்லை"
– *கீதை 8:15*

"பழுதுபட்ட துணிகளைக் களைந்துவிட்டு, மனிதன்
புதியவற்றை அணிந்து கொள்வது போன்று,
ஆன்மா பழைய உடல்களை நீத்துப் புதியவற்றில்
புகுகிறது"
- *கீதை 2:22*

என்று பகவத் கீதை குறிப்பிடுகிறது. பஞ்ச பூதங்களால் உருவாக்கப்பட்ட இந்த உடல் அழிந்து போகும்; இதே உடல் திரும்பக் கிடைப்பதில்லை. இந்த ஆன்மாவிற்கு மறுமையில் கொடுக்கப்படவிருக்கின்ற உடல் மகிமைக்குரியதாயிருக்கும். புதிய ஏற்பாட்டில் இதற்கு ஓர் உவமையோடு கூடிய புதிய விளக்கம் கொடுக்கப்படுகிறது. பவுலடிகளார் இது குறித்து எழுதும்போது,

*"இறந்தோர் எப்படி எழுந்திருப்பார்கள், எப்படிப்பட்ட சரீரத்தோடே வருவார்களென்று ஒருவன் சொல்வானாகில், மதியீனனே, "நீ விதைக்கிற விதை செத்தாலொழிய உயிர்க்க மாட்டாதே."*

*"நீ விதைக்கிறபோது இனி உண்டாகும் மேனியை விதையாமல், கோதுமை அல்லது மற்றொரு தானியத்தினுடைய வெறும் விதையையே விதைக்கிறாய்."*

*"அதற்குக் கடவுள் தமது சித்தத்தின்படியே மேனியைக் கொடுக்கிறார்; விதை வகைகள் ஒவ்வொன்றிற்கும் அதற்கேற்ற மேனியையே கொடுக்கிறார்."*

*1 கொரிந்தியர் 15:35-37.*

என இம்மை, மறுமைக்குரிய உடல்களைக் குறித்து விளக்கமாக எழுதுவது நம் சிந்தனையைத் தூண்டுகிறது.

கீதையின் இன்னோரிடத்திலும் இது குறித்த விளக்கம் தரப்படுகிறது.

"இவ்வுடலில் குழந்தைப் பருவமும் இளமைப் பருவமும் மூப்பும் உண்டாவது போல ஆன்மாவுக்கு வேறு உடல் எடுப்பதும் அமைகிறது."- கீதை 2:13

மேலே குறித்த கீதையின் பகுதிகளில், ஆன்மாவுக்குத்தான் வேறு உடல் கொடுக்கப்படுகிறது என்னும் கருத்து உள்ளதே தவிர, ஓர் உடலுக்கு இன்னொரு உடல் மாற்றாய் அமைகிறது என்ற குறிப்பு இல்லை. எனவே, 'போன பிறவியில் நான் இவ்வாறு பிறந்து வளர்ந்தேன்' என்றோ, 'அடுத்த பிறவியில் நான் இவ்வாறு பிறப்பேன்' என்றோ கூறுவது கடவுட் கோட்பாட்டுக்குப் பொருந்தாது. எனவே, பிறவிச் சுழற்சிக்கும் கடவுட் கோட்பாட்டுக்கும் தொடர்பில்லை என்க.

'மறுபடியும் பிறத்தல்' என்பதற்கு உள்ளம் மாறிப் பிறத்தல் என்று பொருள் என முன்னர்க் குறிக்கப்பட்டது. தீமை செய்வதற் குப் பயன்பட்ட ஒருவரது அகக் கரணங்களும், புறக் கரணங்களும் (அசுத்த மாயை), உள்ளம் மாறிப் பிறந்தபிறகு அதே உறுப்புகள் நன்மை செய்யும் கருவிகளாக மாற்றம் பெறுகின்றன. இதற்குச் 'சுத்த மாயை' என்று சைவத்தில் பெயர் கொடுக்கப்படுகிறது.

ஓர் உவமையால் இதனை விளக்கலாம். ஒரு பறவை முட்டை இடுகிறது; பின்னர் முட்டையைத் தாய்ப் பறவை அடைகாத்து, அதன் பிறகு முட்டையிலிருந்து குஞ்சு வெளிப்படுகிறது. தாய்ப் பறவை வயிற்றிலிருந்து முட்டை வருவது முதற்பிறப்பு; முட்டை யிலிருந்து குஞ்சு வருவது இரண்டாம் பிறப்பு. இதைப் போன்றது தான் 'மறுபடியும் பிறப்பது' ஆகும். குழந்தை பிறக்கின்ற போது உள்ளம் அதற்குப் பக்குவப்படுவதில்லை. உள்ளம் பக்குவப்பட்டு, 'பாவத்திற்குச் செத்து நீதிக்குப் பிழைத்திருக்கும்' புதிய நிலைக்கு அது வரவேண்டுமென்றால் இறையருளும் ஆன்மாவின் ஒப்படைப்பும் மிக மிகத் தேவையாகும். இதனைத் 'துவிஜா' என்று கீதை 1:17, 17:14 ஆகிய பகுதிகளிலும் பிறவற்றிலும் குறிப்பிடுகிதென லாம். 'துவிஜா' என்றால் 'மறுபடிப் பிறந்தவர்', 'இருபிறப்பாளர்' என்று பொருள். பிராமணர்தாம் இரு பிறப்பாளர் என்று தவறாகப் பொருள் எழுதி வைத்திருக்கிறார்கள்.

விவிலியத்தில் மறுபிறப்புப் பற்றி இயேசு கிறித்துவுக்கும் நிக்கதேம் என்பவருக்கும் ஓர் உரையாடல் நிகழ்ந்தது. அப்போது,

> *"மறுபடியும் பிறந்தாலன்றி எவரும் இறையாட்சியைக் காண இயலாது"* யோவான் 3:3

என்று இயேசு நிக்கதேமிடம் கூறினார். அப்போது நிக்கதேம், வயதான ஒருவர் மீண்டும் தாயின் வயிற்றில் புகுந்து மறுபடிப் பிறக்க முடியுமா என்று கேட்டார். அதற்கு இயேசு,

> *"மனிதரால் பிறப்பவர் மனித இயல்புடையவர்; தூய ஆவியால் பிறப்பவர் தூய ஆவியின் இயல்பை உடையவர்"* யோவான் 3:8

என்று பதிலுரைத்தார். எனவே மறு பிறப்பென்பது இறையருள் பெற்று புதிய மனமாற்றம் பெறுவதைக் குறிக்கிறது. தன் மனத்தில் கடவுளுக்கு இடமளிக்கும்போது அவர், 'தன் செயலற்று' இறைவன் நடத்துகின்ற வண்ணம் செயல்படத் தொடங்குகிறார். அவரது ஊனியல்பு அழிந்து ஆவிக்குரிய இயல்பு நிலைபெறத் தொடங்கு கிறது. காற்றின் பிறப்பிடத்தைக் காணவியலாதது போல ஆவி யினால் பிறப்பதையும் ஊனக் கண்களால் காணவியலாது. ஊனுட லில் பிறக்கின்ற ஒருவர், ஊனியல்பை அழித்து, ஆவியினால் பிறப்படைய வேண்டும். இதுவே மறுபிறப்பாகும்.

## *நிறைவுரை*

பலிக் கோட்பாட்டையுடைய பழைய ஏற்பாட்டு வழிபாடுகளும் இறையியலும் புதிய ஏற்பாடாகிய பலி நிறைவேற்ற இறையியல் வழிபாடுகளில் நிறைவேற்ற மடைந்துள்ளன. கடவுள் மாந்தனாக இவ்வுலகில் அவதரித்து மாந்தவினம் முழுமைக்கும் தமது பலியின் மூலம் விடுதலையையும் மீட்பையும் முத்திப் பேற்றுக்கான வழி முறைகளையும் ஈட்டி வைத்துள்ளார். இத்தைய மையப் பொருளை விளக்கிக் காட்டுவதாக வேதாந்தம் திகழ்கிறது. இவ்வகையில் கிறித்தவத்திற்கும் வேதாந்தத்திற்கும் பெருத்த வேறுபாடுகள் இல்லை. ஆயினும் அதன் உட்பொருளைக் கிறித்தவத் திருமறை யின் உதவியுடன் மட்டுமே தெளிவாக அறிய முடிகிறது. முன்னரே குறிப்பிட்டபடி, வேதாந்தத்தின் கருத்து முறைகள், உள்ளவை உள்ளபடியே நம் கைகளில் கிடைத்துள்ளன என்று கூறுதற் கில்லை.

தோமையர் காலத்தில் இந்தியாவிற்கு வந்த கிறித்தவக் கோட்பாடுகள், இந்திய மண்ணுக்கேற்ற வகையில் உரம்பெற்று வளர்ந்துள்ளன. 'கசடறக் கற்க' என்னும் பொய்யா மொழிக்கேற்ப, வேதாந்தத்தில் சேர்ந்துள்ள கசடுகளை நீக்கிக் கற்கின்ற ஒருவரால் வேதாந்தத்தைக் கற்ற ஒருவரை இயேசு பெருமானிடத்தில் ஆற்றுப் படுத்துவது இயல்பானதாகவும் தகுதியுடையதாகவும் அமையும் என்பதில் ஐயமில்லை. ■

# வேதாந்தமும் கிறித்தவமும்

வேதங்களை அந்தப்படுத்துவதுதான் வேதாந்தம். வேதங்கள் பலிசெலுத்தி வழிபடுவதை விளக்குகின்றன. வேதாந்தம் பலிமுறை வழிபாட்டை அந்தப்படுத்துகிறது. அதாவது, பலி நிறைவேற்றத்தை வலியுறுத்துகிறது. உலக வரலாற்றில், இயேசு கிறித்து உலக மக்களின் பாவங்களுக்காகப் பலியாகி விட்டார். ஆகவே பலி நிறைவேறிவிட்டது. இதன் தாக்கம் இந்திய மெய்ந்நூலியலில் உள்ளதனை இந்நூல் விளக்கிச் சிறப்பிக்கிறது.



**பேராசிரியர் யா. தா. பாசுகரதாசு** பாளையாங்கோட்டை தூய யோவான் கல்லூரியில் பயின்று, சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வியல் நிறைஞர், முனைவர்ப் பட்டங்கள் பெற்றவர். தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனத்தின் துணைத்தலைவராகவும் பாடத்திட்ட இயக்குநராகவும் திகழும் இவர், மலேசியா, பிரிட்டன், அமெரிக்கா முதலிய நாடுகளில் கருத்தரங்கங்கள் நடத்தி உரைகள் பல நிகழ்த்தியுள்ளார். சமய மெய்ந்நூல் ஒப்பாய்வு தொடர்பாகத் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஏராளமான ஆய்வுக்கட்டுரைகளும், பத்து நூல்களும் எழுதியுள்ளார்.



**தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்**
508, 22 –ஆம் தெரு, பெரியார் நகர், கொரட்டூர், சென்னை – 600 080.